# ஸ்ரீ ராமாநுஜன் 123

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 11 | 1959ஸு மார்ச்சுமீ விளம்பிஸு பங்குனிமீ | மலர் 3 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—15.

அந்தாமத் தன்பால் அடியார்களோ டிறைவன்
வந்தாரத் தான்கலந்த வண்மையினல்—சந்தாபந்
தீர்ந்த சடகோபன் திருவடிக்கே நெஞ்சமே!
வாய்ந்தவன்பை நாடோறும் வை.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | மனமே! | ஆர கலந்த வண்மையினல் | பரிபூர்ண ஸம்ச்லேஷம் தந்த ஔதார்யத்தினல் |
| இறைவன் தான் | எம்பெருமான் | சந்தாபம் தீர்ந்த | தாபம் நீங்கப்பெற்ற |
| அம் தாமத்து அன்பால் | ஸ்ரீ வைகுண்டத்திற் பண்ணும் விருப்பத்தோடே | சடகோபன் | ஆழ்வாருடைய |
| அடியார்களோடு வந்து | (அஸ்த்ர பூஷணுதிகளாயுள்ள) நித்ய ஸூரிகளோடே கூடிப் (பரம பதத்தினின்றும்) வந்து | திரு அடிக்கே | திருவடிகளிலேயே |
| | | வாய்ந்த அன்பை | பொருத்தமான பக்தியை |
| | | நாள் தோறும் வை | எப்போதும் செலுத்துவாயாக. |

திருநாட்டிலுள்ள நித்யஸூரிகளோடே கூடி அநுபவிக்கவேணுமென்று பார்த்த ஆழ்வாருடைய மனோரதத்தை ஒருவாறு தீர்க்க நினைத்த எம்பெருமான் பரமபதத்தில் தனக்குள்ள விருப்பத்தை ஆழ்வார் பக்கலிலே பண்ணி, திவ்யாபரண திவ்யாயுதங்களாகிற நித்யஸூரிகளோடே தானே இந்நிலத்தில் திருநகரியேற எழுந்தருளி ஸம்ச்லேஷ ரஸம் தந்தருளினபடியாலே வருத்தம் தீரப்பெற்ற ஆழ்வாருடைய திருவடிகளிலேயே பக்தி பண்ணுமாறு திருவுள்ளத்திற்கு உரைத்தாராயிற்று — * அந்தாமத்தன்பு செய்தென்னும் பதிகத்தில்.

கீழ் * ஆடியாடி பதிகத்தில் ஆழ்வார்க்குண்டான துயரம் முதலையின் வாயிலே யகப்பட்டுத் துடித்த கஜேந்திராழ்வானுடைய துயரத்தோடு ஒப்பிடலாயிருந்தது. அந்த கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!' என்று கதறினபோது அக் கூக்குரல் கேட்டவளவிலே "𑌅𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌤𑌚𑌮𑍂𑌪𑌤𑌿𑌪𑍍𑌰𑌹𑌿𑌤𑌹𑌸𑍍𑌤𑌮𑌸𑍍𑌵𑍀𑌕𑍃𑌤𑌪𑍍𑌰𑌣𑍀𑌤𑌮𑌣𑌿𑌪𑌾𑌦𑍁𑌕𑌂 𑌕𑌿𑌮𑌿𑌤𑌿𑌚𑌾𑌕𑍁𑌲𑌾𑌨𑍍𑌤𑌃𑌪𑍁𑌰𑌮𑍍। 𑌅𑌵𑌾𑌹𑌨𑌪𑌰𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑌤𑌗𑌰𑌾𑌜𑌮𑌾𑌰𑍋𑌹𑌤𑌃 𑌕𑌰𑌿𑌪𑍍𑌰𑌵𑌰𑌬𑍃𑌂𑌹𑌿𑌤𑍇 𑌭𑌗𑌵𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌰𑌾𑌯𑍈 𑌨𑌮𑌃" = அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம் அஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதி சாகுலாந்தஃபுரம், அவாஹநபரிஷ்க்ரியம் பதகராஜமாரோஹத: கரிப்ரவரப்ரும்ஹிதே பகவதஸ்

த்வராயை நம:." [ஸ்ரீரங்கராஜ ஸ்தவம்.] என்னும்படியாகக் கனவேகத்தோடே மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து காட்சிதந்து தானும் மகிழ்ந்து அவனையும் மகிழ்வித்தவாறுபோல, ஆழ்வாருடையவும் "வலங்கொள் புள்ளுயர்த்தாய்" என்ற கூக்குரலைக் கேட்டவுடனே 'அந்தோ! நாம் ஜகத்தை நிர்வஹித்தபடி வெகு அழகியதாச்சுது! நாம் ஆரானோம்!' என்று நொந்து, தன்னுடைய ஸ்வரூப ரூபகுணங்கள் அலங்காரம் திவ்யாயுதங்கள் சேர்ந்த சேர்த்தி இவை யெல்லாவற்றோடும் வந்து கலவிதந்து அதனாலே அவன் பரமஸந்துஷ்டனாய் க்ருத க்ருத்யனா யிருக்கிற விருப்பை ஆழ்வார் அநுபவித்து அவ்வநுபவத்தினாலுண்டான மகிழ்ச்சியின் மிகுதியினால் இத்திருவாய்மொழியில், தாம் பெற்றபேற்றைப் பேசி யநுபவித்தாராயிற்று. .... .... .... *

## ஆழ்வார்திருநகரியில் அரையர் மறைவு.

ஸ்ரீமந்நாதமுனிகள் நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து திவ்விய பிரபந்தங்களை நிதியாகப்பெற்றபின் அனேக திவ்யதேசங்களில் அரையர்ஸேவை யென்பது ஏற்பட்டது. முடிமீது பீதாம்பரகிரீடமணிந்துகொண்டு கையில் தாளத்தோடு திவ்யப்பிரபந்தம் ஸேவிப்பவர்கள் அரையரெனப்படுகிறார்கள். இவர்கள் பல திவ்யதேசங்களில் பண்டு ஏற்படுத்தப்பட்டிருந்தாலும் இப்போது நம்பெருமாள் ஸன்னிதி, ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார்திருநகரி ஆகிய மூன்று திவ்யதேசங்களில் மட்டுமே விளங்கி வருகிறார்கள். கைசிகத்வாதசியன்று திருக்குறுங்குடியில் அரையர் ஸேவையுண்டு; எனினும் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து அரையர் அவ்விடமெழுந்தருளி நிர்வஹித்துவிட்டுத் திரும்புவதுதான் வழக்கம். அங்கு நிரந்தர வாஸியான அரையர் இல்லை. மேலே குறித்த மூன்று ஸ்தலங்களில் மட்டுமே அரையர்களின் ஸேவைஆழ்வார் திருநகரியில் சிலவாண்டுகளாக ஒரே அரையர் இருந்துவந்தார். அவரும் சென்றவாரத்தில் திருநாடலங்கரித்துவிட்டாரென்பதை வெகு துக்கத்துடன் தெரிவிக்க நேர்ந்துவிட்டது. இவர்க்கு ஒரு குமாரர் இருந்தாலும் அவர் இக்கைங்கர்யத்தில் அன்பில்லாதவராயும் யோக்யதையிலும் குறையுற்றவராயுமிருக்கின்றார். ஆதலால் இனி ஆழ்வார் திருநகரியில் அரையர் ஸேவைக்கு அவகாசமில்லையென்றே சொல்லவேண்டியதாக நேர்ந்திருக்கின்றது. அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் இடையறாது நிகழ்ந்துவந்த அரையர் ஸேவைக்குக் குறை ஏற்பட்டதென்பது ஸ்ரீவைஷ்ணவவுலகம் வருந்தத்தக்கதாகவேயுள்ளது. இக்குறையைப் பொலிந்து நின்றபிரானும் நம்மாழ்வாரும் திருவுள்ளமிரங்கிப் பரிஹரித்தருள வேணுமென்று பிரார்த்தித்து நிற்கிறோம். ... ... .... *

## சென்னை வெங்கடராமாநுஜலு நாயுடுவின் பிரிவு.

சென்னையில் அப்பா அண்டு கம்பெனிக் குடும்பம் மிகவும் பிரஸித்தமானது. அதைச் சேர்ந்த ஸ்ரீமான் K. வெங்கடஸாமி நாயுடு அவர்களை யறியாதாரில்லை. அவருடைய உடன்பிறந்த தம்பி வெங்கடராமாநுஜலு நாயுடு வென்பவர் நேற்று 11-3-59 பகலில் ஆசாரியன் திருவடி சேர்ந்தார். இவர் ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதி தர்மகர்த்தாக்களில் ஒருவராயும் சிறந்த நிர்வாஹகராயுமிருந்தார். சென்ற தை மாதத்தில் தான் இவர்க்கு அறுபதாண்டு நிறைவு விழா நடைபெற்றது. பாரிசவாயு என்கிற வியாதிகண்டு இரண்டு மணி நேரத்தில் இவர் விண்ணுலகேகியது வைணவ வுலகுக்கே சமாளிக்க முடியாத கஷ்டமும் நஷ்டமுமாகும்.

# கடிதங்கள்.

ப்ரஹ்மஸ்ரீ கவிபூஷணம். டாக்டர் P. K வெங்கடேசம் (ஸ்ரீவேங்கடேச்வரானந்தா) அவர்கள். ஆரோக்ய ஆச்ரமம். 80 2-வது மெயின்ரோட், அடையார், சென்னை—20. இந்த மஹானை யறியாதார் இருக்கமாட்டார். இவர்களது அன்பார்ந்த கடிதம் 10–3–59 தேதியுள்ளது, வருமாறு.

" கனம் சுவாமிகட்கு நமஸ்காரம். தாங்கள் 68 வருஷங்களுக்குள் 680 வருஷங்களில் செய்து முடிக்கத்தக்க கைங்கரியங்களைச் செய்துள்ளீர்களென்றால் மிகையாகாது. தங்கள் 69-வது அவதாரதினத்தை ஆரோக்ய ஆச்ரமத்தில் கொண்டாடத் திருவருள் தூண்டுகின்றது. எந்த ஞாயிறு தாங்கள் ஆச்ரமத்திற்கு எழுந்தருள முடியுமென்பதைத் தெவிப்பின் பாக்கியம். ஸமீபத்தில் ஆரோக்யாச்ரமத்தில் நடந்த வித்ஸபையின் சார்பில் மூன்று பெரியார்கட்கு வேதவ்யாஸஸ்வரூபி என்ற அருள் நாமம் ஸர். C. P. ராமஸ்வாமி ஐயர் தலைமையில் ஏற்பாடாகியுள்ளது.

1. பண்டிட் ஸ்ரீவத்ஸ ஸோமதேவசர்மா. 2. திவான்பஹதூர் K. S. ராமஸ்வாமி சாஸ்திரிகள். 3. ஸ்ரீ. உ. வே. P. B. அண்ணங்கராசாரியஸ்வாமி. தாங்கள் மூவரும் ஒருவராம் மூர்த்திதான். திரிமூர்த்தியே ஒருமூர்த்தியான குருமூர்த்தியன்றோ. தாங்கள் பலவாண்டு வாழ்ந்து பலகோடி ஞானயஜ்ஞங்கள் செய்யவேண்டி எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றோம். தற்போது விஷ்ணு காஞ்சியில் நடக்கும் விசேஷங்கட்கு வர மனமிருந்தும் அவகாசம் கிடைக்கவில்லை. ஆனால் தங்களை நினைக்காத நாளே கிடையாது. இன்று நாளைய தொடர்பா ?

இங்ஙனம்,

கவிபூஷணம். டாக்டர் வேங்கடேசம்.

## இரண்டாவது கடிதம்.

(2) ஸைதாப்பேட்டை ஸ்ரீ. உ. வே. நாதமுனி சேஷாசார்ய ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம். ஸ்ரீராமானுஜன் 122 ந. கிடைத்து இரண்டு மூன்று தடவை வாசித்துப்பார்த்தும் "ஶாஸ்த்ரஂ ந ஶாஸ்த்ரஂ..." என்பதை நினைத்து, பல அறிஞர்களோடு கூடி வாசித்துக் களிக்க வேணுமென்கிற ஆசை தோன்றியதால் சென்ற வெள்ளிக்கிழமை மாலை பெருமாள் ஸந்நிதியில் இதுவே ஸத்காலக்ஷேபமாக நடைபெற்று 3-மணிகாலம் அவரவர்கள் மெய்மறந்திருந்தார்கள். 'லக்ஷ்மணன் அஸத்யவாதி' என்கிற பேச்சு இனிமேல் தலைகாட்டாதென்று யாவரும் ஒரே பேச்சாகப் பேசினார்கள். "வால்மீகியே மஹர்ஷியே" என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தை யெடுத்து எழுதியிருந்ததைப்பற்றி அவரவர்களுக்கு உண்டான சிரிப்பு அடக்க முடியவில்லை. இது அச்சுப்பிழை என்பது சந்தேகமிராது. இதுபோலவே (கட்டிலில்) என்றதும் மற்றும் சில விஷயங்களும் அச்சுப்பிழையாக விழுந்துவிட்டதென்று எதிர்வாத ஸ்வாமிகள் ஒரேவார்த்தையில் முடித்திருக்கலாம். ரஸமான பல விஷயங்கள் வெளிவந்து உலகத்தைக் களிக்கச் செய்யவேண்டிய பாக்கியவசத்தினால் அந்த ஸ்வாமிக்கு அந்த வழியில் புத்தி செல்லவில்லைபோலும். ஆறுவது மலரை அன்புடன் எதிர்பார்த்து நிற்கிறோம். சேஷன், **10-3-59.**

---

## ஸ்ரீ உ. வே D. ராமஸ்வாமி ஐயங்கார் ஷஷ்டியப்தபூர்த்திச் சிறப்பு.

சென்னையில் பிரபல அட்வகேட்டாக விளங்கிவரும் ஸ்ரீமதுபய வே. திண்டுக்கல் ராமஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிக்கு நேற்று மாசிமீ திருவோண நக்ஷத்திரத்தில் அறுபதாண்டு நிறைவு ஆயிற்று. இதுபற்றிய கொண்டாட்டம் காஞ்சீபுரத்தில் தேவப்பெருமாள் ஸந்நிதி

வீதியில் ஒரு பெரிய திருமாளிகையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது (6-3-59) வெள்ளிக் கிழமையன்று. மாங்கல்யதாரணாதி விசேஷம் சாஸ்த்ரப்படி நடந்தது.

ஸ்ரீமான் ஐயங்கார் லௌகிகத்திற்போலவே வைதிக ஸம்ப்ரதாயத்திலும் ஆழ்ந்த அறிவுபெற்றவர் என்பதை உலகமுழுது முணரும். கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீமத் V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியோடு நெருங்கின பழக்கம் பெற்றிருந்த இந்த ஸ்வாமிக்கு அவருடைய திருக்குணங்களெல்லாம் அமைந்துள்ளனவென்று கூறலாம். அர்ச்சாவதார ப்ராவண்யத்திலும் தேவப்பெருமாள் பக்தியிலும் அவரை அதிசயித்தவரென்றும் சொல்லலாம். இந்த மஹான் சிறுசிறு நூல்களாக வெளியிட்டிருக்கும் புத்தகங்களினால் இவருடைய அத்வி தீயமான ஆசார்ய பக்தியும் அர்ச்சாவதார ப்ராவண்யமும் உலகறிய நிற்கும். இது தவிர, ஸர்வபூத ஸுஹ்ருத்தாக விளங்குந்தன்மை இவரிடத்து விசேஷித்து விளங்கும். வைதிக வித்வான்களிலும் லௌகிகத் தலைவர்களிலும் இவருடைய பரிசயத்திற்கும் அன்பிற்கும் இலக்காகாதவர்கள் இலரென்றே சொல்லலாம். வைதிக வித்வான்களை கௌரவித்து ஆதரிப் பதில் எப்போதுமே அபிநிவேசமுள்ளவர். இஃது இவர்க்கு இயற்கையாகவே அமைந்த தொரு சிறந்த செல்வமென்று சொல்லலாம்.

ப்ரக்ருதம் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவ வியாஜத்தினால் நூற்றுக்கணக்கான வைதிக வித்வான்களும் லௌகிக ப்ரமுகர்களும் அழைக்கப்பட்டு விஜயம் செய்திருந்தார்கள். மார்ச்சு 5, 6, 7 ஆகிய மூன்று தேதிகளில் இக் கொண்டாட்டம் வெகு சிறப்பாக நடை பெற்றது. வித்வத்ஸதஸ்ஸும் நடந்தேறியது. பரிகணித திவ்ய தேசங்கள் பலவற்றிலிருந்து அந்தந்த திவ்ய தேசாதிகாரிகள் எம்பெருமான்களின் பஹுமானங்களை மிகுந்த ஆதரவோடு அனுப்பியிருந்தார்கள். ப்ரதி ஸத்காரங்களும் இவரால் வெகு நன்றாகச் செய்யப்பட்டன. திவ்ய தேசங்களிலிருந்து வந்திருந்த அர்ச்சக பரிசாரகாதிகளுக்கும் பண்டிதர்களுக்கும் யோக்யதாநுகுணமாகப் பரிசுகள் வழங்கப்பட்டன.

தேவப்பெருமாள் பக்கலில் இவர்க்கு அமைந்திருக்கின்ற அஸாதாரண ப்ராவண்யத் திற்கு ஏற்றபடி அன்று பேரருளாளப் பெருமாளுக்கும் பெருந்தேவித் தாயாருக்கும் புறப் பாடு மஹோத்ஸவம் ப்ராப்தமாயிற்று. திருவோணத்திற்காகப் பெருமாள் புறப்பாடு; வெள்ளிக்கிழமைக்காகத் தாயார் புறப்பாடு. இங்ஙனே நேரும்போது இரட்டைப் புறப்பாடு என வழங்குவர் காஞ்சீபுரத்தவர்கள். அப்படிப்பட்ட தருணங்களில் விசேஷ கோஷ்டிகள் சேரும். இதர திவ்யதேசங்களில் ப்ரஹ்மோத்ஸவத்திற்கும் அத்தகைய கோஷ்டி சேராது. இந்த கோஷ்டி வைபவம் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு அஸாதாரணமான தன்னேற்றம். ப்ரக்ருத ஷஷ்ட்யப்தபூர்த்தி தினத்தன்று இந்த இரட்டைப் புறப்பாடு வெகு சிறப்பாக நடை பெற்றது. பகலில் பெருமாளுக்கும் தாயாருக்கும் திருமஞ்சனமும் ஆஸ்தானமும் லோகோத் தரமான ப்ரக்ரியையில் நடைபெற்றன. திவ்ய தம்பதிகளுக்கு இவருடைய ஸத்கார விசேஷங்களும், திவ்யதம்பதிகளிடமிருந்து இவர்க்கு ஸத்கார விசேஷங்களும் விலக்ஷணமாக நிகழ்ந்தன. ஸர்வப்ரகாரத்தாலும் இவருடைய பெருமைக்குத் தக்கபடி இவ்வறுபதாண்டு நிறைவு விழா காஞ்சீபுரிக்கே ஒரு சோபையாக நடைபெற்றது. இது சென்னைமாநகரில் நடைபெற்றிருந்தால் இவ்வளவு அதிசயங்கள் பரிமளிக்க ப்ரஸக்தியிராது. நல்ல ஆலோசனை கொண்டு நல்லவிடத்தில் நன்றாக நடத்தப்பட்டதென்று யாவரும் கொண்டாடினார்கள்.

இம் மஹான் இவ் வுலகநன்மையின் பொருட்டு நீடூழிகாலம் விளங்குவாராக. .... *



அகிலபாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ஸபா—வருஷோத்ஸவக் கொண்டாட்ட ஸமய விசேஷம் 14-12-58

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:. ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றி

## ஆறுவது மலர்.

ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி எழுதியது



ஸ்ரீகாஞ்சீ ஜகத்குரு ஸ்ரீமதநந்தாசார்ய ஸ்வாமி திருவடிகளில் ஸமர்ப்பிக்கப்பட்டது

**5–3–1959.**

# முகவுரை.

1. த்ரௌபதி வஸ்த்ரவ்ருத்தியினால் மானஹானி தீரப்பெற்றாளென்பது அவள் செய்த ஶரணாகதியினாலென்று ஸ்ரீவசனபூஷணத்தினால் தெரியவருகிறது. அது நாமஸங்கீர்த்தனத்தினாலானதென்று முமுக்ஷுப்படியினால் தெரியவருகிறது. ஆகவே இவ்விரண்டு க்ரந்தங்களுக்கும் பரஸ்பர விரோதம் காண்கிறதாம். இதற்குப் பரிஹாரம் எங்ஙனே செய்யலாமென்னில், அவள் வஸ்த்ரத்திற்காக ப்ரபத்திசெய்ததாகமட்டும் ஸ்ரீவசனபூஷணம் தெரிவித்ததேயொழிய அதனால் பலன் ஸித்தித்ததாகத் தெரிவிக்கவில்லை; முமுக்ஷுப்படியோவென்னில், திருநாமத்தினால்தான் பலன் ஸித்தித்ததாக ஸ்பஷ்டமாய்த் தெரிவித்திருக்கின்றதாம். ஆகவே அவள் ப்ரபத்தி செய்தாளென்பதை மட்டும் தெரிவிப்பதில் ஸ்ரீ வசனபூஷணம் ப்ரமாணமாய் நிற்கும். திருநாமமே பலன் பெறுவித்ததென்பதில் முமுக்ஷுப்படி பிரமாணமாய் நிற்கும். ஏவஞ்ச உபயக்ரந்தங்களுக்கும் இங்ஙனம் விரோதம் பரிஹரிக்கப்பட்டுவிட்டது—என்பதாகவொரு வாதம் பதினேழு வருஷங்களுக்குமுன் கிளம்பி ஶாந்தமாயிற்று.

2. அதேவாதம் மறுபடியும் மூன்று நான்கு வருடங்களுக்குமுன் கிளம்பி அப்போதே நம்முடைய நூல்களினால் ஸமாஹிதமாகி, முடிவாக ஜகதாசார்யஸூக்தி ஸுதாநிதியென்கிற எழுதரங்கங்கள் கொண்ட நூலினால் திரோஹிதமாயிருந்து, நான்கு வருஷங்கள் கழித்து இப்போது மீண்டும் கிளர்ந்திருக்கின்றது. ஒருவர்க்குக் குமாரர்கள் மூவர். தகப்பனார் எங்கே? என்று கேட்டவர்க்கு 'அனுஷ்டானத்திலிருக்கிறார்' என்று ஒரு குமாரர் கூறினார். 'ஸந்த்யாவந்தனம் செய்துகொண்டிருக்கிறார்' என்று மற்றொருகுமாரர் சொன்னார். 'ஜபம் பண்ணிக்கொண்டிருக்கிறார்' என்று இன்னொரு குமாரர் உரைத்தார். இங்ஙனே வசனவ்யக்திகள் வெவ்வேறாயிருந்தாலும் அர்த்தபேதமில்லாமையாலே இவ்வார்த்தைகளில் விரோத ஶங்கைக்கோ பரிஹாரத்திற்கோ ப்ரஸக்தியில்லாதாப்போலே ப்ரக்ருத விஷயத்தில் ஸ்ரீவசனபூஷணமும் முமுக்ஷுப்படியும் ஏகார்த்தகங்களாகையாலே விரோத சங்கைக்கோ பரிஹாரத்திற்கோ ப்ரஸக்தியே கிடையாதென்பது நெடுநாளாகவே பெரியார்கள் பணித்துப் போருமது. இதனை நாம் பரக்க உபபாதித்து, விரோத சங்கையைக் கிளப்பினவர்களின் வாதங்களை அடியறுத்தோம். இடையில் நான்கு வருடங்கள் தணிந்திருந்த இந்த விவாதம் * [illegible] * என்று பவபூதி சொன்னகணக்கிலே இப்போது தலையெடுக்கத் தொடங்கியது. கோதா நிலயத்தின் வெளியீடாகிய "திரௌபதியும் திருநாமமும்" என்ற புத்தகம் இப்போது விமர்சிக்கப்படுகிறது.

3. ஒரு விஷயத்திற்கே ஸ்ரீ பாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம் என்று மூன்று க்ரந்தங்கள் அவதரித்ததுபோல ப்ரக்ருதவிஷயத்திலும் நம்மிடமிருந்து இப்போது மூன்று நூல்கள் தோன்றின. மூன்றும் இப்போது க்ரமேண வெளிவருகின்றன. இவற்றை நாம் வாசித்துக்காட்டக் கேட்ட மஹான்கள் சிலர் இம்மூன்றையும் ஸாரம் ஸாரதரம் ஸாரதமம் என்று கொள்ளலாமென்றார்கள். 'எதை ஸாரமென்னலாம்? எதை ஸாரதரமென்னலாம்? எதை ஸாரதமமென்னலாம்?' என்று கேட்டதற்கு நன்றாக ஆராய்ந்து பார்த்து 'மூன்றும் ஸாரதமமே யென்னத் தட்டில்லை' என்றார்கள். இது தற்புகழ்ச்சியன்றிக்கே யதார்த்த கீர்த்தனமென்னுமிடத்தை அவரவர்கள் எளிதினுணர்வார்கள். ... .... *

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# சிங்கப்பெருமாள் திருவாக்குவெற்றி

—( ஆருவது மலர் )—

( ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி யெழுதியது )

# வியாக்கியானங்களின் வீறு.

1. வடமொழி நூல்களுக்கோ தென்மொழி நூல்களுக்கோ அவதரித்துள்ள வியாக்கியானங்களை விசேஷமாகப் பார்த்து வருகிறேம். பதவுரையாக மட்டும், அல்லது பொழிப்புரையாக மட்டும் எழுதப்படும் வியாக்கியானங்கள் நிற்க. * व्याख्यानं पञ्चलक्षणम् — வ்யாக்யாநம் பஞ்சலக்ஷணம் * என்கிற முதுமொழியின்படி லக்ஷண பூர்த்தியுள்ள பரிபூர்ண வியாக்கியானமாக அமையும் விவரணங்களில் ஆவச்யகமான விடங்களில் பதச்சேதமும் பதார்த்த ப்ரதிபாதநமும் விக்ரஹமும் வாக்ய யோஜநையும் ஆக்ஷேபஸமாதானமுமாகிய இவை அமைந்தே தீரும். மல்லிநாதன் முதலான ஸம்ஸ்க்ருத பண்டிதர்களும், நச்சினார்க்கினியர் பரிமேலழகர் முதலான தென்மொழிப் புலவர்களும் எழுதியுள்ள வியாக்கியானங்களைக் காணுமிடத்து "இப்படியன்றோ வியாக்கியானம் அமையவேண்டும்" என்று சொல்லாதாரில்லை. அந்த மஹான்களும் அவர்களுடைய வியாக்கியானங்களும் நிற்க.

2. ஸம்ப்ரதாயத்தில் விசதவாக் சிகாமணிகளென்று புகழ்பெற்ற மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸரணியை நோக்குமிடத்து * **ந பூதோ ந பவிஷ்யதி** * என்கிற வசன விசேஷந்தான் ப்ராமாணிகர்களுக்கு நினைவுக்கு வரும். தமிழ் மொழியில் அமைந்தவையான ஸ்ரீவசனபூஷண-தத்வத்ரய-ஆசார்ய ஹ்ருதயாதி ரஹஸ்யங்கள் வெறுந் தமிழல்ல; ஸம்ஸ்க்ருத வாக்ய பஹுளங்கள் என்பது அவற்றில் பரிசயமுள்ளவர்களறிந்தது. அவற்றுக்கு மாமுனிகள் அருளிச் செய்துள்ள வியாக்கியானங்கள் ஒருவரும் ஒரு குறையும் கூறவொண்ணாதபடி யமைந்தவை யென்பது ஜகத் ப்ரஸித்தம். ஸம்ஸ்க்ருத வாக்ய பஹுளமான மூலத்தில் ஸம்ஸ்க்ருத பதங்களுக்கு வ்யுத்பத்தி காட்ட வேண்டிய ஆவச்யகதையுள்ள விடங்களில் சிறிதும் உபேக்ஷிப்பதில்லை.

— விஶிஷ்ட விஶேஷண ஸத்³வாரகமாக —

3. தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்தில் (169) "**விசிஷ்ட விசேஷண ஸத்வாரகமாக**" என்பது ஒரு சூர்ணை. ஈச்வரன் தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே அவன் ஜகத்துக்கு உபாதாநகாரணமாயுமிருக்குமென்று பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்கையில், அவனே ஜகத்தாய்ப் பரிணமித்தால் நிர்விகாரனென்பது எங்ஙனே சேருமென்கிற சங்கையை உத்க்ஷேபித்துக் கொண்டு ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே நிர்விகாரத்வ ச்ருதி பொருந்தக் குறையில்லை யென்று ஸாதித்து, அதன் மேல் ஸ்வரூபத்துக்கு விகாரமில்லையாகில் இவன் தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கிறுனென்ற பரிணாமம் இவனுக்கு உண்டாம்படி யெங்ஙனே? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக மேலே உதாஹரித்த "விசிஷ்ட விசேஷண ஸத்வாரகமாக" எனகிற ஸ்ரீஸூக்தி அவதரித்துள்ளது மூலத்தில். இதில் (ஆக) என்கிற ஒரு சொல் தவிர மற்றதெல்லாம் ஸம்ஸ்க்ருதம், விஶிஷ்ட விஶேஷண ஸத்³வாரக" மென்கிறவிதற்கு என்ன பொருள்? எப்படி வ்யுத்பத்தி? என்று சதுச்சாஸ்த்ர பண்டிதர்களைக் கேட்டுப் பார்க்கலாம், மஹா பாஷ்யாந்த வித்வான்களை வினவலாம். அடியேன் பல வித்வான்களைப் பலகால் கேட்டுப் பார்த்தேன். மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தைப் பாராமல் ஒருவரும் வாய்திறக்க முடியவில்லை.

4. இங்கு மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி எங்ஙனே யென்னில் ;

விஶிஷ்டம் ச தத் விஶேஷணஞ்சேதி விஶிஷ்ட விஶேஷணம் என்று வ்யஸ்த கர்ம தாரய ஸமாஸத்தைப் பண்ணி, தேன ஸஹ வர்த்ததே இதி ஸஹாரகமென்று பஹுவ்ரீஹித்தை பஹுவ்ரீஹித்து 'விஶிஷ்ட விஶேஷணேந ஸஹாரகம்— விஶிஷ்ட விஶேஷண ஸஹாரகமென்று த்ருதீயா தத்புருஷஞ்செய்கை ஶப்தத்துக்கு வ்யுத்பத்தி பண்ணிக் கொள்வது. விசிஷ்டமாவது விஶேஷ யுக்தமானதாய் விசிஷ்டமான விசேஷண மென்று தண்ட குண்டலாதிகள் போலன்றிக்கே ஶரீரபூதமாகையாலே வ்யக்திஸ்வரூபமல்லாத விஶேஷத்தை யுடைத்தான விசித்ரரூப விஶேஷணத்தைச் சொல்லுகிறது. அன்றிக்கே, விஶிஷ்ட விஶேஷண மென்கிற விதுக்கு—ஶரீர பூதமாய்க் கொண்டு என்று மொக்கத் தன்னோடே கூடியிருக்கிற விஶேஷண மென்று பொருளாகவுமாம், அப்போதும் வ்யக்திஸ்வரூபமான தண்ட குண்டலாதிகளில் வ்யாவ்ருத்தி ஸித்திக்குமிறே, விஶேஷணத்தாலே ஸஹாரகமான வென்றது— இப்படி அப்ருதக்ஸித்தமான விஶேஷணமாகிற ஹேதுவாலே த்வார ஸஹிதமாக இவனுக்குப் பரிஞும முண்டாகிற தென்கை. இத்தால் அப்ருதக் ஸித்தமான விசித்ரரூப விஶேஷண த்வாரா இவனுக்குப் பரிஞும முண்டாகிற தென்றதாயிற்று."

இவை மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகள்.

5. வைதிகஸார்வபௌமர்களும் அனேக ஶாஸ்த்ரங்களில் வ்யுத்பந்நர்களுமான ப்ரசண்ட பண்டிதர்கள் இக்காலத்திலுமுள்ளார்களே ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில். அவர்களுள் ஒருவராவது இவ்வளவு தெளிவாகவும் விஶதமாகவும் ஸுபரிஷ்க்ருதமாகவும் எழுத வல்லவருளரேல் அவரை விக்ரஹமாக வைத்து ஆராதிக்கத் தட்டிராது. மேலே உதாஹரித்த மாமுனிகளின் வியாக்கியான பங்க்திகளை இருபது முப்பது தடவை வாசித்து மனனம் பண்ணி ஸ்ரீகோஶத்தை மூடி வைத்திட்டு அந்த மூல சூர்ணைக்கு வியாக்கியான மெழுதுக வென்று வேண்டினாலும் ஒரு மஹாபண்டிதராலும் இங்ஙனே யெழுத முடியாதென்பது திண்ணம். "என்பது வெள்ளிடை மலை ;— என்பதைக் கண்டோமல்லவா ?" என்று இங்ஙனே யெழுதுகிற பண்டிதர்கள் பல பலருளர்.

6. மேலே யுதாஹரித்த மாமுனிகளின் திவ்ய கம்பீர மதுர பங்க்திகளிலே "அன்றிக்கே" என்று தொடங்கிப் பக்ஷாந்தரமாக ஒரு பொருள் விவரிக்கப் பட்டுள்ளதன்றோ ; "முந்தின பொருளென்ன ? பிந்தின பொருளென்ன ? விவரித்துச் சொல்லவேணும்" என்று பிரார்த்தித்தாலும் ச்ருங்க க்ராஹிகயா ஸமஞ்ஜஸமாக வெடுத்துச் சொல்லவும் வல்லாரில்லையே. ஸ்ரீகோஶத்தைக் கையில் வைத்துக் கொண்டு பங்க்திகளைத் திருப்பித் திருப்பி வாசித்து முத்துப் பேட்டைக்கும் பட்டுக் கோட்டைக்கும் போய்ப் போய்த் திரும்புவர்கள்.

— உக்த விஷயத்திற்கு வ்யாக்யாதாவபோத நிரூபணம் —

7. ப்ரக்ருதம் இவ்விஷயத்தை இங்கு நாம் எடுத்துக் காட்டியது எதற்காக வென்னில் ; கேண்மின். ஒருவரும் ஒருவிதமான குறையும் கூறவொண்ணுதபடிக்கும், வியாக்கியான ஸரணியை ஒருவரும் லவலேஶமும் அநுகரிக்கவு மொண்ணுதபடிக்கும் விவரணம் செய்தருள்பவரான மணவாள மாமுனிகள் மூலத்தில் ஆக்ஷேப ஸமாதானங்களுக்கு ஈஷத் ப்ரஸக்தி யுண்டானாலும் உபேக்ஷியாதும் சோம்பாதும் அவற்றை நிரூபித்தே நிற்பவர். தாம் வியாக்கியானித் தருள்வதாகக் கைப்பற்றின மூல ஸ்ரீஸூக்திகளில் விரோதம் சங்கிக்க இடமிருந்தால் இப்போது நம் போன்றவர்கள் பழுதே போராட வேண்டும் படியாக விட்டு வைத்

திரார். இதைப்பற்றி இங்கு விவரிக்க வேண்டியதே அடியேனுக்கு மிக முக்கியமானது இதற்குப் பூர்வாங்கமாகவே கீழ் விஷய மெழுதினபடி. மாமுனிகளின் திருவாக்கு வைசத்யம் நம் போன்ற மிதமதிகளுக்கு நிலமன்று என்று நிரூபித்துக் காட்டவேண்டியே அஃது எழுதிற்று. இதாநீந்தநர்கள் விரோத பரிஹாரம் என மகுடமிட்டுப் பிள்ளை லோகாசார்யருடைய திவ்ய ஸூக்திகளில் விரோதமிருப்பது போலவும், அதைத் தாம் பரிஹரிப்பது போலவும் காட்டி நிற்பது மணவாள மாமுனிகளுக்கு மஹத்தான அவத்யம் நிரூபித்ததாகப் பர்யவஸிக்கு மத்தனை என்பதை மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி ஸுதா ப்ரவாஹமக்நர்கள் நெஞ்சில் சிக்கனக் கொள்ளவேணும்.

## — மாமுனிகளின் விரோத பரிஹார ப்ரக்ரியைகள். —

8. மணவாளமாமுனிகள் தமது வியாக்கியானங்களில் ஆங்காங்கு விரோதமெடுத்துக் காட்டுவதும் தத்பரிஹாரமும் செய்து காட்டுவதுமான ப்ரணாளிகளை ப்ரக்ருதமான அல்ப வ்யாஜத்தில் உலகுக்கு நாம் மிகப் பெரிய விருந்தாக உபகரிக்கிறோம். மாமுனிகள் இருவகையான விரோதங்களை யெடுத்துக் காட்டிப் பரிஹரிப்பதுண்டு. (1) பிள்ளை லோகாசார்யருடையவும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடையவும் ஸ்ரீஸூக்திகளுக்கு வேறு சில ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளோடு விரோதம் தோன்றுவதாக எடுத்துக்காட்டிப் பரிஹரிப்பது ஒன்று. (2) இவர்களினுடைய ஸ்ரீஸூக்திகளிலேயே பரஸ்பரம் விரோதமிருப்பதாக எடுத்துக் காட்டிப் பரிஹரிப்பது மற்றொன்று. விரோதத்தை யெடுத்துக் காட்டிப் பரிஹாரம் செய்வதாகிற வழியில் புகாமலே விரோதத்தையும் தத்பரிஹாரத்தையும் காட்டிக் கொடுக்கிற ஆச்சரியமான வொரு பத்ததியும் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளில் மிகவுண்டு. இவற்றை யெல்லாம் நாம் விசதமாகவும் விரிவாகவு மெடுத்துக் காட்டப் புகுந்தால் இதுவே யொரு பெரிய நூலாகும். சுருக்கமாகச் சிலவற்றை மட்டும் இங்கெடுத்துக் காட்டுகிறோம்.

## மூலகாரருடைய ஸூக்திகளில் மாமுனிகள் காட்டியுள்ள பரஸ்பர விரோத பரிஹாரங்கள்.

9. ஆசார்யஹ்ருதயத்தில் (107) "முந்நீர்வர்முந்தார் சூட்டுங்கோவையாழியென்கிற ஸாக்ஷாத்க்ருதஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு யாத்ருச்சிகாதிகளுண்டாகில் தோன்றும்" என்பதொரு சூர்ணிகை. ஆழ்வாரை எம்பெருமான் விஷயீகரிப்பதற்கு ஹேதுவாக ஜ்ஞாதஸுக்ருதங்களொன்றும் கிடையாது என்பதுமட்டுமன்று; யாத்ருச்சிகாதிகளான அஜ்ஞாதஸுக்ருதங்களும் கிடையாதென்பதை விவரித்து வருகின்ற ஆசார்யஹ்ருதயகாரர் மேலே குறித்த சூர்ணிகையினால் என்ன தெரிவித்தாரென்னில், ஸ்வகீய வ்ருத்தாந்தங்களையும் பரகீய வ்ருத்தாந்தங்களையும் ஸாக்ஷாத்கரித்துப் பத்தும் பத்தாகப் பேசியிருப்பவரான ஆழ்வார், தம்மை எம்பெருமான் அங்கீகரிக்கைக்கு அடியான யாத்ருச்சிகஸுக்ருதங்களுண்டாகில் அவற்றையும் தாம் கண்டு வெளியிட்டேயிருப்பர்; அப்படி வெளியிட்டிருக்கக் காணாமையாலே அவையும் ஆழ்வார்க்கு இல்லையென்பது விளங்கிற்று என்று தெரிவித்தாரானார். இதற்கு மேல் (111) "மாதவன் மலைநீர் நிழலென்று ஏறிடுமது" என்று தொடங்கியுள்ள சூர்ணையானது இத்தோடு விரோதிப்பது போல் காணப்படுகிறது. அஜ்ஞாத ஸுக்ருதங்களில் ஆழ்வாருக்கு அந்வயமுண்டு போல் [மூலகாரராலேயே] நன்கு காட்டப்பட்டுள்ளது. இங்கே விரோதமிருப்பதாக மிதமதிகளுக்குத் தெரியவே மாட்டாது. மணவாளமாமுனிகள் இங்கு விரோதத்தை யெடுத்துக் காட்டிப் பரிஹரித்திருக்கும் படியைக் காட்டுகிறோம்.

10. * மாதவன் மலை நீரித்யாதி சூர்ணையை வியாக்கியானித்துத் தலைக்கட்டின பின்—

"கீழே * யாத்ருச்சிகாதிகளுண்டாகில் தோன்றும் * என்றதுவும் இங்கே * மாதவனித்யாதியாலே அவனேறிடத் தக்கவை சிலவுண்டாக இவர் தம்முடைய உக்தியாலே கண்டெடுத்துக் கழிக்கிறவிதுவும் தன்னில் சேரும்படி எங்ஙனே யென்னில்"

என்னும் ஸ்ரீ ஸூக்திகளால் பரஸ்பர விரோதத்தை யெடுத்துக் காட்டி, உடனே பரிஹாரம் காட்டியருளுகிருர்—

"யாஜ்ஞவல்க்யாதிகள் தான் பலவுமுண்டாகையாலே சுத்ருக்ஷட்டங்களாய் மஹாஹலத்துக்கு உறுப்பாய் வந்து விழுமவையும் ஆபாஸங்களாயிருக்குமவையுமுண்டாகையால், சுத்ருக்ஷட்டங்களாய் அவனுக்கு ஹேதுவாகக் கொள்ளலாம்படியிருக்குமவற்றைக் கீழே சொல்லிற்றுக்கி, ஆபாஸங்களாய் அவன் ஆரோபித்துக் கொள்ளத் தக்கவற்றை இங்கே சொல்லிற்றென்று விபஜித்துக் கொள்ளுமளவில் விரோதமில்லை." என்று.

இத்தகைய விரோத பரிஹாரம் மாமுனிகள் தவிர வேறு யாரும் செய்யகில்லார். ஆசார்ய ஹ்ருதயகாரருடைய ஸூக்திகளில் பூர்வோத்தரவிரோதமெடுத்துக்காட்டிப் பரிஹரித்தருளின தற்கு இது நிதர்சநமாகக் காட்டிற்று. அதிலேயே பூர்வாசார்ய ஸூக்தி விரோதமெடுத்துக் காட்டிப் பரிஹரித்த விடங்களும் பலவுண்டு; ஓரிடமெடுத்துக்காட்டுவோமிங்கு.

## ஆசார்யஹ்ருதய ஸூக்தியில் மாமுனிகளெடுத்துக் காட்டியுள்ள பூர்வாசார்ய வசந விரோத பரிஹாரங்கள்.

11. ஆசார்யஹ்ருதயத்தில் (99) * ஜந்மாந்தரஸஹஸ்ரநற்றவங்களாலே * இத்யாதி சூர்ணையில் "**விளக்கினைக்கண்டு**" என்றவிடத்தை வியாக்கியானித்தருளினவுடனே

"* விளக்கினை விதியில் காண்பார்* என்கிறவிது ஹ்ருதயத் ஸாக்ஷாத்காரமாகப் பூர்வர்கள் வியாக்கியானம் பண்ணிவைத்தார்களாகிலும் இவர் ஆத்ம பரமாகவே அருளிச்செய்தாரென்று கொள்ள வேணும். ஹ்ருதயஸ்தநத்ருஷ்டநங்களை மேலே சொல்லுகையாலே. * விதியில் காணும் ப்ரதமமத்யமதசைகளை * என்று ஆத்மபரமாகவிறே கீழும் இவரருளிச் செய்தது. யோஜநா பேதங்களுண்டாயிருக்குமிறே."

என்றருளிச் செய்துள்ளார் மணவாள மாமுனிகள். ஆசார்யஹ்ருதயத்தை விட்டு இனி ஸ்ரீ லோகாசார்ய திவ்ய ஸூக்திகளிற் செல்வோம்.

## தத்வத்ரய வியாக்கியானத்தில் காட்டியுள்ள விரோத பரிஹாரங்கள்.

12. தத்வத்ரய - ஈச்வரப்ரகரணத்தில் (53) "நித்யோதித ஸாந்தோதித பேதமும்" இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்தில்-

"வ்யூஹங்கள் நாலென்றும் மூன்றென்றும் ஶாஸ்த்ரங்களிலே சொல்லும். ...... இவர் கீழ் வ்யூஹத்ரயமென்றருளிச் செய்ததுக்கும் இங்கு வ்யூஹ வாஸுதேவருண்டாக வருளிச் செய்ததுக்கும் விரோதமில்லை"

என்று மாமுனிகள் அருளிச் செய்திருப்பது காண்க. அவ்விடத்திலேயே "ஷட்த்ரிம்ஶத்பேதபிந்நமான பத்மநாபாதி விபவமும்" என்றவிடத்து விவரணத்தில்

"...... * த்ரிம்ஶத் நவ தேவதேவேதை பத்மநாபாதயோ மதாः * என்று முப்பத்தொன்பதாக அஹிர்புத்ந்ய ஸம்ஹிதாதிகளிலே சொல்லிற்றேயாகிலும் விஷ்வக்ஸேந ஸம்ஹிதையிலே முப்பத்தாருகச் சொல்லியிருக்கையாலே இவர் ஷட்த்ரிம்சத்பேதபிந்நமென்றதில் குறையில்லை; இனி அந்த முப்பத்தொன்பதிலே மூன்றைக் குறைத்துக் கொள்ளுகையிறேயுள்ளது; அவையாவன: கபிலதத்தாத்ரேய பரசுராமரூபமான ஆவேஶாவதாரங்கள்."

என்றருளிச் செய்தார் மாமுனிகள்.

ஜகத் ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கேவல லீலை யென்று பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்ததை யதாப்ரமாணம் வியாக்கியானித்து விட்டு, உடனே ஆனல் என்று தொடங்கி ஒரு

விரோதத்தை ப்ரஸங்கித்துப் பரிஹாரம் காட்டியருளி யிருப்பது ப்ரஹ்மஸூத்ரகாரர்க்கும் அறிவூட்டுமதாக வுள்ளது. அவர் *லோகவத் து லீலா கைவல்யம்* என்கிற ஸூத்ரத்தினால் ஜகத்ஸ்ருஷ்டி கேவல லீலைக்காகவே யென்றார். இதன் மேல் மணவாள மாமுனிகள் *சென்று சென்றாகிலும் கண்டு சன்மம் கழிப்பானெண்ணி ஒன்றியொன்றி யுலகம் படைத்தான்* *விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்* இத்யாத்யநேக ப்ரமாணங்களைக் காட்டி சேதநருடைய உஜ்ஜீவநம் ப்ரயோஜனமாக ஜகத்ஸ்ருஷ்டி பண்ணினனென்று சொல்லுகிற இவ்வசனங்களுக்கு வையர்த்த்யம் வாராதோ வென்று சங்கித்துப் பரிஹாரம் காட்டியிருப்பதாவது— "உபய ப்ரயோஜநமுமுண்டாயிருக்கச் செய்தேயும் லீலை ப்ரயோஜந மென்றவிது ப்ராதான்யத்தைப் பற்றச் சொன்ன வித்தனை" என்று. இதற்கு மேலே பல வாக்யங்களை யிட்டு இதை நன்கு ஸ்தாபித்திருப்பதும் மாமுனிகளொருவர்க்கே நிலமானது.

— முமுக்ஷுப்படியும் பரந்தபடியும். —

13 முமுக்ஷுப்படியில் "உபாயம் அனுஜ்ஞையாலும் இவை நேரே உபாயமல்லாமையாலும் இம்மூன்றும் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை" என்கிற த்வயப்ரகரணஸூர்ணையில்— ஸித்திக்கு அத்யவஸாயாத்மகமான மாநஸ ஸ்வீகார மொன்றுமே அமையும்; இம்மூன்றும் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை என்று தெரிவிக்கப் பட்டுள்ளது. இவ்விடத்து வியாக்கியானத்தில், பிள்ளை லோகாசார்யர் தாமே பரந்த படியில் "அதிகாரி பூர்த்திக்கு கரணத்ரயமும் அபேக்ஷிதமாயிருக்கும்" என்றருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்தியை யெடுத்துக்காட்டி ஸமந்வயப்படுத்தியிருக்குமழகு காண்க.

மணவாளமாமுனிகள் திவ்ய ஸூக்திகளை ஊன்றி நோக்குமிடத்து, புத்திமான்களுக்கு விரோதம் தோன்றக்கூடிய இடங்களிலும் மஹாப்ராஜ்ஞர்களில் ஒருவர்க்கும் விரோதம் தோன்ற மாட்டாத விடங்களிலும் தம்முடைய விலக்ஷணசக்தி விசேஷத்தாலே விரோதங்களை விளக்கிக் காட்டி ஸமஞ்ஜஸமான பரிஹாரங்களையும் நிரூபிப்பது தவிருவதில்லையென்று தேறுவதால் ப்ரக்ருத விஷயமான ஹ்ருதய விஷயத்தில் ஸ்ரீமல்லோகாசார்ய ஸ்ரீஸூக்திகளில் பரஸ்பரவிரோதம் சிறிதேனுமிருந்தாலுங்கூட மாமுனிகள் உபேக்ஷித்திருக்கவே மாட்டார். அவர்க்குத் தோற்றாததும் தோற்ற நின்ற மேதாவிகளின் மேதைக்கு வியக்கவேண்டியதே.

விரோதத்தை ப்ரஸங்கித்து தத் பரிஹாரம் பண்ணுவதாகக் காட்டாமே ஸமந்வயம் காட்டின விடங்கள்.

ஸ்ரீ வசநபூஷணத்தில் (63) "ரக்ஷணத்துக்கு அபேக்ஷிதம் ரக்ஷ்யத்வாநுமதியே." என்பது ஒரு சூர்ணை. நிருபாதிக ரக்ஷகனனவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இச் சேதநன் பக்கல் வேண்டுவது— நீ யெனக்கு ரக்ஷ்யம் என்றால் அல்லேனென்னாதே தன்னுடைய ரக்ஷ்யத்வத்தை இசைந்து நிற்குமத்தனையே வேண்டுவது என்பதாக இந்த சூர்ணையின் பொருள். இப்படிச் சொல்லுமளவில் *सर्वज्ञोऽपि हि विश्वेशः सदा कारुणिकोऽपि सन्। संसारतन्त्रवाहित्वाद्रक्ष्यापेक्षां प्रतीक्षते— ஸர்வஜ்ஞோபி ஹி விச்வேசஸ் ஸதா காருணிகோபி ஸந், ஸம்ஸாரதந்த்ர வாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே* என்கிற ப்ரஸித்த ப்ரமாணத்தோடு விரோதிக்கின்றது. எங்ஙனே யென்னில்; ரக்ஷகனை சேதநனுடைய அபேக்ஷையை ப்ரதீக்ஷிப்பதாக இந்த ப்ரமாணம் தெரிவிக்கின்றது; அபேக்ஷையின் அநபேக்ஷையை ஸ்ரீவசநபூஷண சூர்ணிகை தெரிவிக்கின்றது. ஆகவே விரோதம் ஸ்பஷ்டமாயிற்று. விசதவாக் சிகாமணிகள் இப்படி விரோதமுண்டாவதாக எடுத்துக் காட்டாமல் ஆச்சர்யமாக வாக்விந்யாஸம் செய்தருளியுள்ளார்;

"*ரக்ஷ்யாபேக்ஷாமென்கிற விடத்தில் சொல்லுகிற வபேக்ஷை ரக்ஷ்யத்வாநுமதிமாத்ரமித்தனை யென்று கருத்து." என்று. [இதை ஸமர்த்திக்கின்ற ஸ்ரீஸூக்தியும் அடுத்தபடியே யுள்ளது; அதாவது— ] "*யாச்ஞா ப்ரபத்தி;* ப்ரார்த்தநாமதி:*

என்கிற ஸ்வீகாரத்தை அப்ரதிஷேதத்யோதக மென்றிறே இவர் தாம் அருளிச் செய்தது.'' என்று.

"த்ரௌபதிக்கு......திருநாமமிறே" என்கிற ப்ரக்ருத ஸ்தலத்திலும் இங்ஙனே நிர்வஹிக்கத் தக்க புடையுண்டு. அதனை விவரிக்கிறோம். "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்ற சூர்ணைக்கு வியாக்கியான மருளுகிறவர்— "திருநாமத்தைச் சொன்ன த்ரௌபதிக்கு வஸ்த்ரத்தை வ்ருத்திப்பித்துக் கொடுத்தது கோவிந்தநாமமிறே" என்று இவ்வளவே யருளிச் செய்யலாயிருக்க, "த்ரௌபதிக்கு" என்கிற பதத்திற்கு அர்த்தமாக— "* சங்கசக்ர கதாபாணே ! த்வாரகாநிலயாச்யுத, கோவிந்த ! புண்டரீகாக்ஷ ! ரக்ஷ மாம் சரணாகதாம்* என்று சரணம் புகுந்த த்ரௌபதிக்கு" என்றருளிச் செய்திருக்கையாலே, த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினதாக ஸ்ரீவசநபூஷணத்திலருளிச் செய்துள்ளபடி அவள் செய்தது சரணாகதிதானென்றும், அதனால் தான அவளுக்கு மானரக்ஷணமாகிற பலன் கைகூடிற்றென்றும். ஆனாலும் இங்கே வாசக ப்ரபாவாதிசயம் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே இங்ஙனே யருளிச் செய்வதில் விரோதமில்லை யென்றும் ஸ்பஷ்டமாகக் காட்டினபடி யன்றோ இது.

# நாமும் நமது நெஞ்சும்.

குவலயானந்தத்தில் தீக்ஷிதர் ரஸிகனுடைய ச்லோக மொன்றை யெடுத்துக்காட்டு கிறார் * नपुंसकमिति ज्ञात्वा तां प्रति प्रेषितं मनः । तत्तु तत्रैव रमते हताः पाणिनिना वयम् – நபும்ஸகமிதி ஜ்ஞாத்வா தாம் ப்ரதி ப்ரேஷிதம் மந:, தத் து தத்ரைவ ரமதே ஹதா: பாணிநிநா வயம். * என்று. ஒரு காதலன் காதலியிடனித்திலே நெஞ்சைத் தூதுவிட்டானும்; தூது சென்ற நெஞ்சு திரும்பி வரவேணுமே, திரும்பவேயில்லையாம்; அப்போது வருந்திச் சொல்லுகிறான் காதலன்; பாணிநி மஹர்ஷி லிங்காநுசாஸநத்திலே மநஸ்ஸை நபும்ஸக மென்று படித்ததனாலே இது ஸ்த்ரீபும்ஸ ஸம்பந்த யோக்யமாகாமல் நம் காரியத்தை நிறைவேற்றுமென நினைத்து இதனைப் போகவிட்டோம்; இது அங்கேயே ரமித்துநின்றது. இது நபும்ஸகமாயிருந்தால் காதலியின் பால் ரமித்து நிற்க ப்ரஸக்தியில்லை; பாணிநி வாக்கை மெய்யென்று நம்பி மோசம் போனோம். அந்த மஹர்ஷியினால் கெட்டோம் கெட்டோம், என்பதாக இந்த ச்லோகத்திற்குப் பொருள். இது வொரு சமத்கார வார்த்தையே யொழிய வேறன்று. [ இதை மேலே விரிவாக நிரூபிப் போம். ] இங்ஙனே ஆழ்வார்களும் பலவிடங்களில் பேசியுள்ளார்கள். * அப்புள்ளின் பின் போன தனி நெஞ்சம் – கண்டுநிற்குங்கொல் மீளுங்கொல் * கண்ணன் வைகுந்தனோடு என்னெஞ்சினாரைக் கண்டால் என்னைச் சொல்லி அவரிடை நீர் இன்னம் செல்லீரோ ? இதுவோ தகவென்று இசைமின்களே * இவை திருவிருத்தப் பாசுரங்கள். * இழந்த வொண்மாமை நிறத்துப் போன என்னெஞ்சினாருமங்கே யொழிந்தார். உழந்தினியாரைக் கொண்டு என்னுசாகோ * என்னுடைநன்னுதல் நங்கைமீர்காள் ! யானினிச் செய்வதென் ? என்னெஞ்சென்னை நின்னிடையேனல்லேனென்று நீங்கி-நாண் மலர்ப்பாதமடைந்ததுவே, * இவை திருவாய்மொழிப் பாசுரங்கள். இத்தகைய பாசுரங்கள் நம்மாழ்வாருடைய திவ்ய ஸூக்திகளில் மலிந்து கிடக்கின்றன. திருமங்கையாழ்வாரும் * வாராய் மடநெஞ்சே ! வந்து, மணிவண்ணன் சீரார் திருத்துழாய்மாலை நமக்கருளித் தாரான் திருமென்றிரண்டத்திலொன்றதனை,...ஆராயுமேலும் பணிகேட்டதன்றெனிலும்; போராதொழியாதே போந்திடு நீயென்றேற்கு. காரார் கடல் வண்ணன் பின் போன நெஞ்சமும், வாராதே யென்னை மறந்தது தான் * என்றிப்புடைகளிலே பல பேசியுள்ளார். இவற்றின் பரமதாத்பர்யத்தை நாம் க்ரஹிக்குமளவில் 'தாங்கள் ஸ்வதந்த்ர கர்த்தாக்களாய் ததேகபாரதந்த்ர்யத்தில் ஊன்றியிருக்கும்படியைத் தெரிவித்தபடி' என்றிவ்வளவே கொள்ளலாமத்தனைபோக்கி வேறொன்றும் கொள்ள இயலாது. இதை நம்முடைய திவ்யப்ரபந்த திவ்யார்த்த

தீபிகையில் பலவிடங்களில் விசதமாக உபபாதித்திருக்கிறோம். பரமதாத்பர்யமாக நாம் கீழே காட்டிய பொருளைக் கொள்ளாமல் ஶப்³தத்தினை மேலே சென்றால், பரிஹரிக்க முடியாத ஆக்ஷேபம் விளையும். அதாவதென்னென்னில் ;

உலகில் ஒருவனை உன்மத்தனென்கிறோம். மநஸ் ஸஹகாரமின்றியே வாய்வந்தபடியே பிதற்றுமவன் எவனோ அவனையே உன்மத்தனென்கிறோம். அநுன்மத்தன் பேசுவதெல்லாம் மநஸ்ஸஹகாரங் கொண்டே பேசப்படும். * என்னெஞ்சினுருமங்கே யொழிந்தார் * இத்யாதிகளான பாசுரங்களைப் பேசும்போது ஆழ்வார் நெஞ்சோடு கூடி யிருந்தாரா ? நெஞ்சை விட்டுப் பிரிந்து தனியே யிருந்தாரா ? என்று கேட்டால் यन्मनसा ध्यायति तद्वाचा वदति * मनः पूर्वो वागुत्तरः * ஆகையாலே நெஞ்சோடு கூடியிருந்தே பேசுகிறார் என்று இசைந்து தீரவேண்டும். நெஞ்சு இல்லாது பேசவே முடியாது. "आत्मा मनसा संयुज्यते, मन इन्द्रियेण. इन्द्रियमर्थेन, ततः प्रत्यक्षम" என்பர்கள் ஶாஸ்த்ரஜ்ஞர்கள். நெஞ்சோடு கூடாதே பேசினதென்றால் அது உன்மத்த பாஷிதமே யென்னத் தட்டில்லை. ஆழ்வார்கள் * வன் பேய் முலையுண்ட வாயன் தன் உன்மத்தன் காண்மினே * ஏறிய பித்தினொடு * இத்யாதிப்படியே ஒருவகையில் உன்மத்தர்களேயானாலும் அநந்விதமாகப் பேசுகிற உன்மத்தர்களல்லர். ஏவஞ்ச, நெஞ்சோடு கூடியிருந்தே பேசுகின்றவர்களான ஆழ்வார்களும் மற்றுமுள்ள கவிகளும் நெஞ்சைப் பிரித்து * என்னெஞ்சு ஒழிந்தது * என்றும் * தத்த்வ தத்தேவாஸதே * என்றும் பேசினால் இதை ஸமந்விதமாக்கப் பார்க்கவேணும்.

தைத்திரீய யஜுர்வேதத்தில் இரண்டாவது காண்டம் ஐந்தாவது ப்ரஶ்நத்தில் வாக்கும் மநஸ்ஸும் விவாதப்பட்டு ப்ரஜாபதியின் பக்கலிலே சென்று முறையிட்டும் பெற்றுக் கொண்டவொரு முடிவு [ஒரு உபாக்கியானமாக] ஓதப்பட்டுள்ளது— * வாக் ச மநச்சார்த்தீயேதாம் * என்று தொடங்கி. அதைச் சிறிது விவரிப்போமிங்கு. [वाक् च मनश्च आर्तीयेताम ] வாக்கும் மனமும் விவாதப்பட்டன வென்கை. என்னவென்று விவர்தமென்னில் ; [अहं देवेभ्यो हव्यं वहामीति वागब्रवीत् , अहं देवेभ्यो इति मनः ] தேவர்களின் பொருட்டு ஹவிஸ்ஸை நான் வஹிக்கிறேனென்று வாக்கு சொல்லிற்று ; நீ யன்று நான்தான் என்று மனது சொல்லிற்று. இங்ஙனே பரஸ்பரம் சொல்லிக் கொள்ள விவாதம் முற்றிற்று. பிறகு என்ன நடந்ததென்னில் ; [तौ प्रजापतिं प्रश्नमैताम् ] விவாதப்பட்ட வாக்கும் மனதும் ப்ரஜாபதியிடம் சென்று எங்களுடைய விவாதத்தைத் தீர்த்து வைக்கவேணு மென்றன. [सोऽब्रवीत्प्रजापतिः] இருவருடைய விவாதத்தையும் செவியுற்ற ப்ரஜாபதி முடிவு சொன்னார், என்ன சொன்னாரென்னில் ; [दूतीरेव त्वं मनसोऽसि] வாக்கே ! மனதுதான் ப்ரபு ; அந்த ப்ரபு இட்ட கட்டளையின்படி நீ பணி செய்யத் தோன்றினையத்தனை. [यद्धि मनसा ध्यायति तद्वाचा वदतीति.] மனது நினைத்ததைத் தானே வாக்காகிய நீ சொல்லமுடியும். ஆகவே உனக்கு ப்ரபுத்வமில்லை— என்று ப்ரஜாபதி முடிவு கூறினார். பிறகு வாக்கு என்ன செய்ததென்ன ; [ तत् खलु तुभ्यं न वाचा जुहवन्नित्यब्रवीत् ] ப்ரஜாபதே ! எனக்கு ப்ரதிகூலமாக நீ முடிவு சொன்ன படியாலே ஹோம விஶேஷ காலத்தில் உன்னை நான் உச்சரிக்க மாட்டேனினி— என்று வாக்கு கோபத்துடனே சொல்லிப் போய்விட்டது. அது ஆசாரத்தில் காண்கிறதோ வென்ன ; [तस्मान्मनसा प्रजापतये जुह्वति ] வாக்கு சொன்னபடியே இப்போதும் நடந்து வருகிறது. * प्रजापतिं मनसा ध्यायन् आघारावाघारयति * என்று வைதிக க்ரியைகளில் புரோஹிதர்கள் சொல்லிவருமது ப்ரஸித்தமன்றோ.

வேதத்திலுள்ள உபாக்கியானம் இங்ஙனே விவரிக்கப் பட்டது. இதனால் என்ன தெரிந்து கொண்டோமென்றால், மனத்தைத் தனிப்படப் பிரித்துவிட்டு வாக்கு மட்டும் பேச இயலாது என்பதை உறுதியாகத் தெரிந்து கொண்டோம். இப்படியிருக்க, நெஞ்சு பிரிந்து போனதாக வைத்தும், நெஞ்சை நோக்கிச் சொல்லுவதாக வைத்தும், நெஞ்சைக் கொண்டா

டிக் கூறுவதாக வைத்தும் வசந வ்யக்திகள் காணப் பட்டால் கீழே நாம் விவரித்தபடி அதற்குப் பரம தாற்பரியம் காணவேணு மத்தனை. கண்ணபிரான் கீதையிலே *मन्मना भव मद्भक्तः* என்கிருன். என்பால் பக்தி பண்ணு என்ருலே போதுமானது; என் பக்கலிலே மனத்தை வை; என்றும் சொல்ல வேணுமோ? என்று கேள்வி பிறக்கும். நம் போன்றவர்கள் அந்ய பரதையோடுங் கூட பக்தி செய்வது [அபிநயம்] உண்டாகையாலே அப்படி அஹ்ருதய பக்தியைச் செய்யாதே என்கைக்காகச் சொல்லிற்று. இங்ஙனே பல பல காட்டலாம். "நான் பகவானிடத்திலேயே நெஞ்சைச் செலுத்தி யிருக்கிறேன்" என்கிற விவக்ஷையை இவ் விதமான சொல்லை யிட்டே தெரிவிக்கவேணு மெனபதில்லை. உக்தி சதுரர்கள் சமத்காரசாலிகளான பலவகைப்பட்ட வாக் விந்யாஸங்களாலே தெரிவிப்பர்கள். *नमस्तस्मै कृतौ येन मुधा राहुवधूकुचौ— நமஸ் தஸ்மை க்ருதௌ யேந முதா ராஹு வதூகுசௌ* என்கிருர் சந்த்ராலோக காரர். ராஹுவின் மனைவியினுடைய ஸ்தனங்களை வ்யர்த்தமாக்கினவர்க்கு வணக்கம் என்றது இதில். இங்கு முக்கியமாக விவக்ஷித மென்ன? என்பதையும், இங்ஙனே ஶிரோவேஷ்டந ப்ராணாயாமம் போல் சொல்லுவதன் ரஸாபிப்ராயத்தையும் ஆலங்காரிகர்களன்ரே அறியவல்லார்.

"ஸ்நாஸ்யந் முதா விப்ரா" என்று ஒரு பெரியவர் சொல்லி வைத்தார். ஜநநீஸ்தந்ய பானாவஸ்தையை விட்டு ஸ்த்ரீணீ ஸ்தந்ய பானாவஸ்தையை எய்துவதற்குள்ளே கல்வி பயில வேணும் என்பது இங்கு விவக்ஷிதம். யதா ஶ்ருதக்ராஹியான வொருவன் இக்கருத்தை யறியாதே ஜாஹ்நவீ ஸ்நாந த்தில் கல்வியிருப்பதாகச் சொல்லுகிருர் பெரியவர் என்று கொண்டு நிஷேக முஹூர்த்தத்தன்று அதுவே நினைவாய்க் கை விளக்கேற்றி இரவெல்லாம் தேடி விட்டு 'பெரியவர் பொய் சொன்ஞர்; இவரும் இளைய பெருமாளைப் போன்றவரே'. என்ருனும். இதற்கீடான விஷயம் ப்ரக்ருதம் யாதெனில்; கேண்மின். யாருக்கும் எந்த பலனையும் கொடுப்பவன் எம்பெருமானே யல்லது அசேதந க்ரியா கலாபம் எதுவுமன்று. *फलमत उपपत्तेः* என்கிற ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் வ்யவஸ்தாபிக்கப் பட்ட விஷயமிது. ப்ரதக்ஷிணம் பலன் கொடுத்தது; ப்ரபத்தி பயனளித்தது; நாமஸங்கீர்த்தனம் பலன் தந்தது, என்றென்று எத்தனை விதமாகச் சொன்னாலும் *स प्रीतोऽलं फलाय* என்று ஸ்வாமி யெடுத்துக் காட்டுகிற வசனப்படிக்கும், "अन्ततस्तैस्तैराराधितस्स एव भगवान् सर्वत्र फलप्रदः" என்று ஸ்வாமி தாமே யருளிச் செய்கிற படிக்கும் ப்ரதக்ஷிண ப்ரபத்தி நாம ஸங்கீர்த்தநாதிகள் வ்யாஜமாத்ரமாய், ப்ரஸந்நனான பரமபுருஷனே பலனளிப்பவனென்று தேறிநிற்கும்.

ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலே ஹட்டர் அற்புதமாக ஒன்று அருளிச் செய்கிருர், எம்பெருமானை ப்ரஸந்நனாக்குவதற்கு மிகப் பெரிய உபாயங்கள் வேண்டியிருக்க, மிகவும் லகுவான நாமஸங்கீர்த்தனமாகிற உபாயத்தினல் அவனை ப்ரஸந்நனாய் விடுவனே? என்கிற ஶங்கையை உபக்ஷேபித்து ஆச்சரியமான ஸமாதான மருளிச் செய்கிருர். லகுவும் குருவுமான காரியங்களன்று பயனளிப்பவை; பரமபுருஷன் ப்ரஸந்நனாய்க் கொண்டு அவனன்ரே பலனளிக்கிருன், அவன் பெருப் பெருத்த உபாயங்களினுலும் ப்ரஸந்நனாகாதொழியலாம்; லகுவான உபாயத்தாலும் ப்ரஸந்நனாய் விட்டேனென்று பகரலாம். அவனைத் தடியெடுத்தடித்துத் தகர்ப்பாயோ நீ? எனகிருர். "... किमयं दण्डवारितः?" என்பது அங்கு ஹட்டருடைய ஸ்ரீஸூக்தி. இதனல், "த்ரௌபதீ விஷயத்தில் எம்பெருமான் ப்ரஸந்நனாய்ப் பலனளித்தான், அவள் கோலினபடி மாநபங்கமாகாமே ரக்ஷணம் செய்தருளினன்" என்கிற பரமார்த்தம் இசையப்பட்டதான பின்பு, அப்பெருமான் ப்ரபத்தியினல் ப்ரஸந்நனை? நாமஸங்கீர்த்தநத்தினல் ப்ரஸந்நனை; என்கிற விசாரமும், 'அதனலன்று. இதனல்; இதனலன்று. அதனல் என்று போராடுவதும் விவேகிகளின் பணியன்று என்று முடிந்தது. ...... *

ஸ்ரீ:

# "திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்."

முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில் "சரணௌ — திருவடிகளை" என்றருளிச் செய்தவுடனே, "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்" என்பது (146-ஆவது) சூர்ணிகை. இதன் பொருளென்னவென்றால், புருஷகாரக்ருத்யம் பண்ணிச் சேர்ப்பிக்கவல்லவளான பிராட்டிதானும் கைவிட்டாலும், * என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்னுமவனான எம்பெருமான் தானும் கைவிட்டாலும் திருவடிகளானவை கைவிடமாட்டா — என்பது பொருள். இங்கே விமர்சிக்கவேணும். எம்பெருமான் கைவிட்டாலும் திருவடிகள் விடமாட்டா என்னும் போது, எம்பெருமான் வேறாகவும் திருவடி வேறாகவும் இருப்பதாக இசைந்து தீரவேண்டும். அதாவது, திருவடியோடு கூடியிராத எம்பெருமானும், எம்பெருமானோடு கூடியிராத திருவடியும் தண்டகுண்டலாதிகள் போலே தனிப்படக் காணத் தக்கவையாயிருக்கவேண்டும். உண்மையில் அப்படியுண்டோ? இல்லை, எம்பெருமான் என்னும்போது திருவடியோடு கூடிய எம்பெருமானே தேறுவன்; அப்படியே திருவடியென்னும் போது எம்பெருமானுக்கு அவயவபூதமாய்க் கொண்டே அது தேறும். ஒன்றைவிட்டு ஒன்று தேறவே மாட்டாது. ஆகவே 'எம்பெருமான் விட்டாலும் திருவடிகள் விடாது' என்கிற வார்த்தை எப்படி ஸாமஞ்ஜஸமாகும்? என்று சங்கை தோன்றியே தீரும். எம்பெருமானுடைய நினைவுதானே கார்யகரமாகக் கூடியது. திருவடிகளுக்கென்று தனியாக வொரு நினைவு உண்டோ? கிடையாது. எம்பெருமான் கைவிட்டானென்றால் திருவடியும் கைவிட்டதாகவே தேறும். திருவடி விடவில்லையென்றால் எம்பெருமானும் விடவில்லையென்றே தேறும். இதனை விவேகிகள் நன்றாக நெஞ்சில் பதியவைத்துக் கொள்ள வேணும். இங்ஙனே ஆய்ந்து அறியப்பெற்றால் 'எம்பெருமான் விடிலும் திருவடிகள் விடாது' என்கிற ஸ்ரீ ஸூக்தியைப் பொருந்த வைப்பதற்கு வழி தேடியே யாகவேண்டும்.

திருவாய்மொழியில் (9–7–9) திருமூழிக்களத்தில் தூதுவிடும் பதிகத்தில் "தாம் தம்மைக் கொண்டு அகல்தல் தகவன்றென்று உரையீரே" என்றொரு பாசுரம். இங்கு வியாக்கியானம் எங்ஙனே யென்னில்; தாம் அகலவேண்டினால் தம்மை வைத்தன்றோ போவது; இவ்வடிவைப் பிரிந்தார் பிழையார் என்றறியமாட்டாரோ? தம்மைக் கண்ணாடிப்புறத்திலே கண்டறியாரோ? தம்மைப் பிரிந்த தசைக்கு உதவுகைக்காகவன்றோ திருமேனியுள்ளது. திருமேனியையுங் கொண்டு அகலுகை தகாதென்று சொல்லுங்கோளென்று சில புள்ளினங்களை யிரக்கிறாள் - என்பதாக. எம்பெருமான் தான் பிரிந்து போனால் போகட்டும்; தன்னுடம்பையுங் கொண்டு அகன்று போவது தவறென்று சொல்லுங்கோள் - என்கிறவிது சமத்கார வார்த்தையேயன்றோ. ஒருவன் 'எனக்கு ஆரோக்யக் குறைவு' என்றானாம். என்ன அநாரோக்யமென்று கேட்க, 'நடந்தால் உடம்பும் கூடக்கூட வருகின்றது; அது தான் வியாதி' என்றானாம். இந்த விநோத வார்த்தையை நினைப்பூட்டுமதாகவன்றோ இங்கு ஆழ்வார் பாசுரமுள்ளது. தாம் தம்மைக்கொண்டு அகல்தல் தகவன்று = தாம் அகன்று போனால் போகட்டும்; தம் உடம்பையும் கொண்டு போவது தகவன்று; என்றனரோ இங்குச் சொல்லுகிறது. உடம்பைக் கொண்டு போகாமல் தாம்மட்டும் அகன்று போவது எங்ஙனேயென்று கேட்டால் என்ன விடை? ஒரு விடையுமில்லை, எம்பெருமானுடைய திருமேனியில் ஆழ்வாருக்குண்டான ஸ்ப்ருஹாதிசயம் இங்ஙனே சொல்லுவித்தது தனை—என்றுதான் கொள்ளவேணும். இங்ஙனே பல விடங்களுண்டு. அலங்காரசாஸ்த்ரத்தில் இத்தகைய வசநவ்யக்திகள் பல

பல் கிடைக்கும். இங்கெல்லாம் தாத்பர்யார்த்தத்தில் நோக்கேயல்லது சப்தார்த்தத்தில் மட்டும் நோக்கு வைத்தால் அஸமஞ்ஜஸம் போலவே தோற்றும். இது போலவே "அவன் விடிலும் திருவடிகள் விடாது" என்ற ப்ராக்ருத ஸ்தலத்திலும் திருவடியின் பெருமை காட்டுவதென்றே தாத்பர்ய விஷயமாயிருக்கும்.

பாதுகா ஸஹஸ்ரத்தில் பாதுகை பெருமாளுடைய திருவடியைப் பற்றிக் கிடந்ததற்கும், சித்ரகூடத்தில் அத் திருவடியை விட்டு அகன்று போனதற்கும் காரண விசேஷங்கள் கூறுகின்றார் கவிகேஸரி. அந்த ரஸோக்தி விசேஷங்களைச் சிறிது விவரிக்கிறோம் கேண்மின்.

* योषिद्भूतदृषन्ति अपोढशकटस्थेमानि वैमानिकस्रोतस्विन्युपलम्भनानि भसितोदञ्चत्परीक्षिन्ति च
दूत्यादिष्वपि दुर्वचानि पदयोः कृत्यानि मत्वेव — *

பெருமாளுடைய திருவடிகளானவை கல்லைப் பெண்ணாக்கினவை. பொன்றச்சகடமுதைத்தவை. கங்கை நீர்கொண்டவை, உத்தரை தன் சிறுவனையுமுய்யக்கொண்டவை. தூது செல்லத் துணிந்தவை - என்றிப்படிப்பட்ட பெருமைகளை யெண்ணிப் பாதுகைகள் திருவடிகளை இது காறும் விடாதே கிடந்தனவாம்; * भृशातुरसहोदरप्रणयभञ्जनस्वैरिणा पदेन त्रिमनेन मे ? ...— வெகு ஆர்த்தியோடு சரணம் புக்க பரதாழ்வானை நிர்தாக்ஷிண்யமாக வெறுத்துத் தள்ளின இத் திருவடியோடு உறவு நமக்கு உற்றதன்றென்று கொண்டு அகன்று போயினவாம் அத்திருவடி நிலைகள். இவ்விரண்டு ச்லோகங்களையுமெடுத்து உபந்யஸிக்கப் புகுந்தோமாயின் ச்ரோதாக்கள் புளகாங்கிதராம்படி உபந்யஸிக்கின்றோம். தத்துவப்பொருள் யாதென்று பார்க்க வேணும். இங்குத் திருவடிகளின் கார்யமாகச் சொன்னவை யெல்லாம் பெருமாளுடைய செய்கைகளேயல்லவா? கல்லைப் பெண்ணாக்குவது. சகடத்தைச் சாடுவது முதலான செய்கைகள் பகவான் திருவுள்ளம் பற்றாமல் திருவடிகளால் மட்டும் ஸம்பவிக்கக்கூடியனவோ? பரதாழ்வானை நிர்தாக்ஷிண்யமாக வெறுத்துத் தள்ளினவன் இராமபிரானேயொழியத் திருவடிகளல்லவே. சரணாகதனான பரதனைத் திருவடிகள் உதைத்துத் தள்ளிவிட்டனவென்றும் வைத்துக்கொள்ளுவோம்; இதைத் திருவடிகள் ஸ்வதந்த்ரமாகச் செய்துவிட முடியுமா? எம்பெருமான் திருவுள்ளம் பற்றிச் செய்த செயல்களை அவற்றுக்குக் கருவிகளாயிருந்தவற்றின் மேலேற்றிச் சொல்லுவது சமத்காரசாலியான வாக்விந்யாஸவிசேஷமத்தனையேயன்றோ. எம்பெருமான் விட்டாலும் திருவடிகள் விடமாட்டா வென்றதன் பரமதாற்பரியமென்ன வென்றால், எம்பெருமான் குற்றவாளர்களை நிக்ரஹிக்க நினைத்தாலும் அவர்களை திருவடிகளைச் சிக்கனப் பிடித்துக் கொண்டால் நிக்ரஹோந்முகமாயிருந்த திருவுள்ளம் அநுக்ரஹமயமாக ஆய்விடும் என்பது தவிர வேறில்லை.

திவ்ய ப்ரபந்தத்தில் பதிகந்தோறும் பயனுரைக்கும் நிகமனப்பாசுரத்தில் - அப்பதிகம் அருவினைகளை நீறுசெய்து விடுமென்றும். மாசறுத்து மதிநலமளிக்குமென்றும் மோக்ஷம் தருமென்றும்... இப்படி பல்வாறு பயனுரைக்கப்படுகின்றது. இப்பயன்களை ஸாக்ஷாத்தாக அளிப்பவன் எம்பெருமானென்பதும் அருளிச் செயல்களினாலேயே அறியக்கிடக்கின்றது. ஆசார்யஹ்ருதயத்தில் — "சாதுசனம் நண்ணாமையர்வற மாசறுக்கும் ... என்னும் ஸாம்யத்தாலே வாஸுதேவன் பத்தினைய தோற்றம் போலே பத்துப்பத்தான விதின் ஆவிர்ப்பாவம்" (214.) என்கிற ஆச்சரியமான சூர்ணையினால் இது விசதமாக அறியத்தக்கதாம். வாஸுதேவனை ஈச்வரனோடு பல்படியாலும் ஸாம்யத்தை வாசகமான திருவாய்மொழிக்கு உபபாதித்துக் காட்டி, அவன் லோகரக்ஷணார்த்தமாகப் பத்தவதாரமெடுத்தாப் போலே திருவாய்மொழியும் லோகரக்ஷணார்த்தமாகப் பத்து பதகமாய் அவதரித்ததென்று இந்த சூர்ணையில் அத்புதமான நிரூபணம் செய்யப்பட்டுள்ளது. வஸ்துஸ்திதியில் வாஸுதேவன் எம்பெருமான் செய்தருளும் செயல்களையே வாசகமான திருவாய்மொழி செய்வதாகச் சொல்லிற்றே

யோழிய, அது வேறு இது வேறு என்று நினைப்பதற்கு அவகாசமேயில்லை. ஸாரஸாரவிவேகங்களுக்கு ஸாக்ஷ்ய நிர்வாஹகங்களாக இங்கு எடுத்துக் கூறப்பட்டுள்ள பத்து விஷயங்கள் எம்பெருமானுக்கும் திருவாய்மொழிக்கும் ஒத்திருப்பதாக நிர்வஹிக்கப்பட்டிருப்பது போலவே, எம்பெருமானுக்கும் ப்ரபத்திக்கும் — எம்பெருமானுக்கும் திருநாமஸங்கீர்த்தனத்திற்கும் — எம்பெருமானுக்கும் அவனடியார்களுக்கும் ஒத்திருப்பதாக நிர்வஹிக்கவும் ஔசித்யமுண்டு ; ஆங்காங்கு நிர்வஹிக்கப்பட்டுமுள்ளது. இதற்குச் சார்பாக ஒரே விஷயம் இங்குக் கூறுவோம் ;

மோக்ஷப்ரதத்வமென்பது எம்பெருமானுக்கே அஸாதாரணமானதென்பது யாவருமறிந்தது, இதனை எம்பெருமானுடையதாகவே கூறியுள்ளது போல பிராட்டியினுடையதாகவும் கூறியுள்ளது; * ஸ்ரேயோ ந ஹி அரவிந்தலோசனமந: காந்தா ப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித் * என்ற ஸ்ரீ குணரத்நகோஶ ஸ்ரீஸூக்தியிலும் மற்றும் பலவிடங்களிலும் அது காணலாம். இதுபோல திருவாய்மொழியும் மோக்ஷம் கொடுக்குமதாகச் சொல்லப்படுகிறது; * கெடலிலாயிரத்துள்ளிவை பத்தும், கெடலில் வீடு செய்யும் * என்பது முதலான பல பாசுரங்கள் காண்க, இந்த மோக்ஷப்ரதத்வந்தன்னையே எம்பெருமானாருடைய செயலாகவும் அமுதனார் நூற்றந்தாதியில் கூறியுள்ளார் — * இராமானுசன், தன்னையெய்தினர்க்கு அத்தானங் கொடுப்பது தன் தகவென்னும் சரண் கொடுத்தே * என்பது முதலான பாசுரங்களில், ஆக, மோக்ஷப்ரதத்வமாகிற ஒரு காரியம் இத்தனை வ்யக்திகளிடத்தில் சொல்லப்பட்டிருப்பது கொண்டு இவ்விஷயத்தில் விரோதபரிஹாரமென்கிற வொரு நூல் அவதரிக்க வேண்டாமோ? 'த்ரௌபதிக்கு வஸ்த்ரம் வளரச் செய்தது ப்ரபத்தியன்று, நாமஸங்கீர்த்தனமே' என்று சொல்லி விரோத பரிஹாரம் பண்ணப் பார்க்குமவர்கள் இங்கு எங்ஙனே விரோத பரிஹாரம் பண்ணப் புகுகிறார்களென்று பார்க்கவேணும். இத்தகைய ஸ்தலங்களில் விரோதமிருப்பதாகக் கொண்டால் அந்த விரோதம் ஊர்ஜிதமாய் நிற்குமேயல்லது பரிஹாரம் காணவழியேயிராது. ... ... ... ... ... *

# த்ரௌபதியும் ப்ரபத்தியும்.

* सर्वज्ञलोकगुरुनिर्मितमार्यभोग्यं वन्दे सदा वचनभूषणदिव्यशास्त्रम् * என்று போற்றப்படும் ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் இருபத்து மூன்றாவது சூர்ணை முதல் பத்து சூர்ணைகளாலே ப்ரபத்தியைப் பற்றின விசேஷங்கள் பரக்க நிரூபிக்கப் பட்டுள்ளன, ப்ரபத்தியை எந்த அதிகாரியும் எந்த தேசத்திலும் எந்த காலத்திலும் எந்த ப்ரகாரமாகவும் எந்த பல ஸித்திக்காகவும் அநுஷ்டிக்கலாமென்றும், இன்ன விஷயத்திலே செய்ய வேணுமென்கிற விஷய நியமமொன்று தவிர வேறு எந்த நியமமும் ப்ரபத்திக்குக் கிடையாதென்றும் பரக்க வருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த ப்ரகரணத்தில் தர்மபுத்ர காக காளியாதிகளை ஒருவிசை மட்டும் பேசி, த்ரௌபதியைப் பலகால் பேசியிருப்பது கொண்டே 'த்ரௌபதியானவள் ப்ரபத்தியினால் தான பேறு பெற்றவளென்பது நிஸ்ஸம்சய விபர்யயமாக நிர்ணயிக்கப் பட்டதாகும். இங்ஙனே யிருந்தும் "த்ரௌபதி, வஸ்த்ரமாகிற பலனை நாமஸங்கீர்த்தநமாகிற உபாயத்தினால் பெற்றாளே யொழிய ப்ரபத்தியினால் பெற்றாளில்லை" என்று சொல்லுமவர்கள் இக் கொள்கைக்குச் சார்பாக நிரூபிக்கும் விஷயங்கள் மூன்று ;

1. கண்ணபிரான் நேரில் எழுந்தருளி விரோதியை யழித்து உதவி செய்யாமை ;
2. பிராட்டியை முன்னிட்டு ப்ரபத்தி செய்யவேண்டியது முறைமையா யிருக்க அந்நனம் செய்யாமை ;

3. சரணாகதியையும் செய்து நாமஸங்கீர்த்தனமும் பண்ணினாளாகையாலே சணல் கண்ட ப்ரஹ்மாஸ்த்ர ந்யாயத்தாலே ப்ரபத்தி நழுவிப் போனமை.

ஆக இம்மூன்று காரணங்களும் ப்ரபத்தி பலிக்கவில்லை யென்பதற்கு ப்ரபலங்கள் என்கிருர்கள். இவை மிகவும் வல்வஜ ஹேதுக்களென்றும், காரணாபாஸ கோடியில் கூட பரிகணிக்கத் தகாதவையென்றும் நன்கு நிரூபிக்கிறோம்.

1. ஸ்ரீவசநபூஷணந் தன்னிலேயே 'ப்ரபத்தி பண்ணுமதிகாரிகள் மூவர்' என்றருளிச் செய்து, அஜ்ஞர்களான அஸ்மதாதிகளையும், ஜ்ஞாநாதிகர்களான பூர்வாசார்யர்களையும், பக்தி பரவசர்களான ஆழ்வார்களையும் நிர்தேசித்துள்ளார் பிள்ளை லோகாசார்யர். ஆக அஜ்ஞரும் ஜ்ஞாநாதிகரும் பக்தி பரவசருமாகிய இந்த ப்ரபந்நர்களுக்கு எம்பெருமான் நேராக வெழுந்தருளி ஸேவை ஸாதித்து ரக்ஷணம் செய்தருளினதாக எங்கேனும் கேட்டதுண்டோ? விபவாவதார காலத்தில் எம்பெருமான் பக்கலில் ரக்ஷணம் பெற்றவர்களில் சிலர்க்கு மட்டும் பகவத்ஸேவை நேராகக் கிடைத்ததென்று சொல்லத்தகுமே யொழிய * இராமடமூட்டுவாரைப் போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு போருமவனும், கண்காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நிற்பவனை எம்பெருமானால் ப்ரபத்தியே வியாஜமாக ரக்ஷிக்கப்பட்டவர்கள் எண்ணிறந்தவர்களல்லவா? அவர்களுடைய ரக்ஷணங்களை இல்லை செய்யும் வழியிலே பர்யவஸிக்குமதான வாதத்தை, விவேகிகள் செய்யலாமோ? ஸகல இதிஹாஸ புராணங்களையும் ஆராய்ந்து பார்த்தால் "பகவான் நேராக வெழுந்தருளி ஸேவை ஸாதித்து ரக்ஷித்தான்" என்று சொல்லக்கூடிய அதிகாரிகள் மிகவும் பரிமிதர்களாக வன்றோ தேறுவார்கள். 'த்ரௌபதியின் ப்ரபத்திக்கு எம்பெருமான் நேராக எழுந்தருளாமையினாலே அந்த ப்ரபத்தி பலிக்கவில்லை யென்பது வெள்ளிடைமலை' என்பாருடைய ப்ரஜ்ஞை விலக்ஷணமாகவே யுள்ளது.

2. பிராட்டியை முன்னிட்டு ப்ரபத்தி செய்திலளாகையாலே ப்ரபத்தியின் பலனையிழந்தாள் த்ரௌபதி— என்கிற வாதம் எடுத்துக் கழிக்கவும் தகாததாயிருக்கின்றதே இதைப் பற்றிப் பல வழிகளில் தெளிவு பிறப்பிக்கிறோம். (1) பிராட்டியை முன்னிட வேணுமென்பது மோக்ஷார்த்த ப்ரபத்திக்கே யொழிய அது ப்ரபத்தி ஸாமாந்ய விஷயமன்று. (2) ப்ரபத்திக்கு கால நியமமில்லாமையை யருளிச் செய்யுமிடத்தில் "இவ்வர்த்தம் மந்த்ரரத்நத்தில் ப்ரதமபதத்திலே ஸுஸ்பஷ்டம்" என்று பிள்ளை லோகாசாரியர் தாமே யருளிச் செய்திருப்பதை ஊன்றி நோக்கினால் இந்த வாதம் எழுவதற்கே இடமில்லை யென்பது விளங்கும். (3) மாநஸமான அத்யவஸாய விசேஷமே ப்ரபத்தியாகையாலே அந்த மாநஸ ப்ரபத்தியில் பிராட்டியின் புரஸ்காரம் இல்லை யென்பதைக் கூறுவதற்கு யாரும் அதிகாரியல்லர். (4) *नासौ पुरुषकारेण न चाप्यन्येन हेतुना। केवलं स्वेच्छयैवाहं प्रेक्षे कञ्चित्कदाचन* என்று எம்பெருமான் கூறுவதற்கு விசேஷித்து லக்ஷ்யபூதர்களிடத்திலே இத்தகைய அவத்யம் சொல்லுவதற்குக் கூசவேண்டும்.

— இதனை நன்கு உபபாதிக்கிறோம் —

ஸ்ரீவசநபூஷணத்தின் உபக்ரமமே புருஷகார வைபவமும் உபாய வைபவமும் சொல்லுவதாக அமைந்துள்ளது. இதில் (14. சூர்ணை) "அறியாதவர்த்தங்களை யடைய அறிவித்து ஆசார்ய க்ருத்யத்தையும் புருஷகார க்ருத்யத்தையும் உபாய க்ருத்யத்தையும் தானே யேறிட்டுக் கொள்ளுகையாலே மஹாபாரதத்தில் உபாய வைபவம் சொல்லிற்றாயிற்று." என்பது மிக மிக நோக்கத் தக்கது. இங்கு மிக விபுலமான மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் ஸேவிப்பது. வியாக்கியானமே வேண்டா; மூலமே போதுமே.

இங்கு முடிவாக "அர்ஜுநனுக்கு தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்தியுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக" என்கிற சூர்ணை ஜீவநாடியாக வுள்ளது. அர்ஜுநனையும் நிரஸநீய கோடியிலே சேர்த்துப் பேசி அன்னவனுக்கு இழிதொழில் செய்ததும், பரமரஹஸ்யத்தையுபதேசித்தது மெல்லாம் கண்ணபிரான் த்ரௌபதி பக்கலில் வைத்திருந்த பக்ஷபாதத்தினாலேயே யென்பது இந்த சூர்ணையின் பொருள். ஆக விப்படி பரம ப்ரேம பாத்ரபூதையான த்ரௌபதி பண்ணின ப்ரபத்திதானே மிகையென்று முடிந்து நிற்க, இவளுடைய ப்ரபத்தியில் 'அது இல்லை இது இல்லை; அங்கம் தப்பிற்று, கரணம் குறைந்தது' என்றிப்படி பழிப்புகள் சொல்லப்புறப்படுவது நம் ஆசார்ய திவ்விய க்ரந்தங்கள் நடையாடாத விடங்களிலே பிறந்து வளர்ந்தவர்களுக்கும் உற்றதன்று.

(3) சணல்கண்ட ப்ரஹ்மாஸ்த்ர ந்யாயத்தை இங்கே நிதர்சிப்பதானது அத்யந்த விபரீத பலனையே தந்து நிற்கும். ப்ரஹ்மாஸ்த்ரத்தைக் கெடுக்க வந்த சணற்கயிறு தானும் விஃபலமாயிற்றென்பது உலகறிந்த விஷயம். த்ருஷ்டாந்தத்தில் ப்ரபத்தியை ப்ரஹ்மாஸ்த்ரஸ்தானத்தில் வைத்தால் சணற்கயிறு ஸ்தானத்தில் நாமஸங்கீர்த்தனமே யன்றோ நிற்பது. நின்றால் இரண்டும் பழுதாயிற்றென்ன வேண்டுமேயொழிய 'ப்ரபத்தி பழுதாயிற்று; நாமஸங்கீர்த்தனத்தினால் பலனாயிற்று' என்று வாய்திறக்க வழியே கிடையாது. ஆக இவ்வளவாலும் ப்ரபத்தி பலிக்கவில்லை யென்பாருடைய வாதம் ஸர்வாத்மநா அநுபபந்ந மென்று முடிக்கப்பட்டது.

---

அறிவிப்பு:— 'வியாக்கியானங்களின்வீறு' என்று தொடங்கி இவ்வளவும் ஸமீபகாலத்தில் நமது அம்ருதலஹரீ பத்ரிகை 185ல் வெளியிடப்பட்டு உலகமெல்லாம் பரவியது. இதை வாசித்துப்பார்த்தவர்களில் ஏறக்குறைய நாற்பது மஹான்கள் தங்களுடைய ஹர்ஷப்ரகர்ஷத்தை அபரிமிதமாகத் தெரிவித்துள்ளார்கள். "இவ்வளவு அரிய பெரிய விஷயங்கள் வெளிவருவதற்கு ஹேதுபூதரான அந்த ஸ்வாமியைத் திக்குநோக்கித் தெண்டனிடுகிறோம்" என்றும் "அந்த ஸ்வாமி வாளா இருந்திட்டாராகில் இவ்வளவு விஷயங்கள் வெளிவருவதற்கு அவகாசமே யில்லாமற் போகுமன்றோ; இது அவர்செய்த மஹோபகாரமேயன்றோ" என்றும் பலர் எழுதியுள்ளார்கள். கள்ளக்குறிச்சி அட்வகேட் ஸ்ரீமான் உ. வே. T. ஆராவமுது தாதாசாரியர் ஸ்வாமியின் ஸ்ரீமுக மொன்றுமட்டும் ஸங்க்ஷிப்த மதுரமாயிருந்தபடியால் இங்கு வெளியிடப்படுகிறது.

"அம்ருதலஹரி 185 அடியேனுக்குக்கிடைத்து ஸேவித்தேன். அடியேனுக்கு இப்போது யாவகவௌஷகவௌஷதங்களெல்லாம் ஸ்ரீராமாநுஜனும் அம்ருதலஹரியுமே. * அம்ருதோபஸ்தரணமஸி, அம்ருதாபிதாநமஸி என்கிற மந்த்ரங்களுக்கு ப்ரஸக்தியில்லாமல் ஆறுமாதங்களாக அஸ்வஸ்த நிலைமையில் இருந்துவருமடியேனுக்கு அம்ருதமே வடிவெடுத்த அம்ருதலஹரி எவ்வளவு ஹோமஷதமாயிருக்கிறதென்பதை உள்ளபடி தெரிவிக்க வாசகங்கள் தெரியவில்லை. ஸாதாரணமாக பகவத் ப்ரஸாத ஸ்வீகாரத்திற்கு உபக்ரமத்திலும் உபஸம்ஹாரத்திலும் அம்ருதபதத்தையுபயோகப்படுத்த மஹர்ஷிகள் கட்டளையிட்டு அப்படியே அம்ருதோபஸ்தரணமும் அம்ருதாபிதாநமுமாய் நடந்து வருகிறது. ப்ரஸாதஸ்வீகாரத்திற்கு அமுதுசெய்வதென்றே ஸாம்ப்ரதாயிகவ்யவஹாரம் நிகழ்ந்து வருகிறது. எம்பெருமானுக்கு போஜ்யாஸநம் ஸமர்ப்பிக்கையில் அநுஸந்திக்கவேண்டிய பாசுரமும் * அடியேன் மேவியமர்கின்றவமுதே * என்பதாக ஸட்டருடைய நியமனமாகக் காண்கிறது. இத்தனை அம்ருதங்களும் தேவரீருடைய அம்ருதலஹரிக்கு ஈடாகுமா? என்கிற ஸந்தேஹமே அடியேனுடைய அநுபவத்தில் தோன்றியது. மதுராதிமதுரமான மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திமாதுர்யத்தை வெகு விஸ்தாரமாக நிரூபித்திருப்பது இவ்வுலகுக்கே பெரும் பாக்கியமென்னவேணும். இப்போது கிடைத்திருக்கும் அம்ருதலஹரியில் திகழும் ஒவ்வொரு வியாஸமும் ஸாஸ்த்ரார்த்தமே வடிவெடுத்திருக்குமழகை யாரே யநுபவிப்பார்!

இதைப்போல் பஞ்ச பக்ஷ்யபரமாந்நம் வேறுண்டோ? அநிர்விண்ண: என்கிற திருநாமத்திற்கு பட்டர் பாஷ்யத்திலுள்ள அர்த்த விசேஷங்களை உபபாதித்திருக்கு மத்புதம் அத்புதமென்றே சொல்லத்தகும். 12 வது பக்கத்தில் "இவரும் இளையபெருமாளைப் போன்றவரே" என்கிற இடம் ஸதிரஸவசநமானது. ப்ரதிவாதிகள் இந்த ரஸவிசேஷங்களை அநுபவிப்பதோடு நின்றார்களானால் மிகவும் பாக்யசாலிகளே." தாஸன் ஆராவமுது.
இப்படிப்பட்ட ஸ்ரீமுகங்களைக் காட்டிலெரித்த நிலாவாகச் செய்வதில் அடியேனுக்கு மனமில்லை. அவை எல்லாவற்றையும் தனிப்புத்தகமாக வெளியிடவே விருப்பம்.

## — த்ரௌபதிபக்கலில் மஹாபசாரவார்த்தைகள் —

த்ரௌபதிக்கு ஶரணாகதி பலிக்கவில்லையென்று ப்ரவசநம் செய்துபோருமவர்கள் அதற்கு வேண்டிய உபபத்திகளை விவரிப்பதோடு நின்றிருக்கலாம். அவளை தூஷிக்கவும் வேணுமோ? என்ன தூஷணமுள்ளதென்னில்; அதை அநுவதித்தாலும் நமக்குப் பாபமுண்டு. ஆனாலும் உலகுக்கு விஷயம் தெரிவிக்கவேண்டி அநுவாதம் செய்கிறோம். பூர்வபக்ஷநூலாகக் கொள்ளப்பட்ட அசட்டுச் சுவடியில் (பக்கம் 112ல்)

"த்ரௌபதிக்கு தெய்வத்தன்மையில்லை யென்பது வெள்ளிடைமலை. ஆனாலும் கற்பும் இல்லையோவெனில்; ஆம். இதற்குப் பின்வருமாறு சான்றுகளை நாம் காண இயலும். கண்ணன் த்ரௌபதியின் கருத்தை ஆராய்ந்தபோது, கர்ணனிடத்திலும் தனக்கு உள்ள விருப்பத்தை அந்த த்ரௌபதியே வெளியிட்டுக் கொண்டதாய்க் கூறப்பெற்றிருக்கிறது. * ஷஷொவி ஜஜ ரொசதெ—ஷ்ஷ்டோபி மம ரோசதே * என்னும் வார்த்தையை இங்குக் காணுதல் நன்றாம். அன்றியும் இவள் பாண்டவர்கள் ஐவரையும் ஸமமாகவெண்ணி அன்பைச் செய்யவேண்டியவள்; ஆயினும் அங்ஙனம் ஸமமாக அன்பைச் செய்யாது அர்ஜுனன்பால் அதிகமான அன்பு பெற்றிருந்தவள். இது பாரதத்தில் நன்கு புலனாம் ………… த்ரௌபதிக்கு தெய்வத்தன்மை இல்லாவிடினும் கற்பு நிலையாவது அழியாதிருப்பின் அவள் அக்காலத்தில் துச்சாஸனனை அழித்தேயிருப்பள் என்பது அவள் இயல்பு அறிவார் யார்க்கும் கூறாமலே நன்கு புலனாம். அவள் குழலை விரித்திருந்த சரிதம் மிகப்பிரஸித்தமன்றோ."

இன்னமும் மேன்மேலுமுள்ள வாக்கிய ராசிகளை அநுவதித்தால் மஹாபாதகியாவோம். ஐயமில்லை. இவ்வபசாரப்ரவாஹமொழிகளுக்கு மணவாளமாமுனிகளையும் ஸாக்ஷியிடுகிறார். இத்தகைய அஸந்தர்ப்பவாக்யக்ரந்திகளாலேயே பூர்வபக்ஷி தம் சுவடியை வளர்த்தியுள்ளார்.

வித்வான்கள் உகக்கும் கதைகளை நாம் எழுதுவது போலத் தாமும் எழுத ஆசைகொண்டு அசட்டுக் கதைகளையெழுதுகிறார். அதற்கும் ஒரேயிடம் காட்டி நிற்போம். (ப. 122)

"ஒரு பெண்ணுக்கும் ஒரு பிள்ளைக்கும் திருமணம் நடத்துவதாக ஒரு நாள் குறிப்பிடப் பெற்றிருந்தது. அந்நாளில் திடீரென ஒருவன் இறந்து விடுகிறான். அதனால் அத்திருமணம் நின்று விடுகிறது. அவ்வாறு அத்திருமணம் நின்று விட்டதற்குக் காரணம் அவ்வொருவன் மரணமாகிற இடையூறாம். இது யார்க்கும் நன்கு விளங்கும். அத்திருமணத்திற்குக் காரணமோ அப்பெண்பிள்ளைகளுக்கு உள்ள அன்பு முதலியனவாம். அக்காரணம் இல்லாமையினால் திருமணம் நின்றுவிட்டதெனக் கூறுவதற்கில்லை. அவ்வாறாயின் அத்திருமணத்திற்கு நாள் குறிப்பிட இடம் ஏற்பட்டிராதன்றோ. (இதற்கு மேலும் இருக்கவேண்டிய வார்த்தைகள்.) அவ்வாறாயின் பந்தலை போட்டிருக்கமாட்டார்கள்; திருமணப் பத்திரிகை அச்சிட்டிருக்கமாட்டார்கள். ஆயிரக்கணக்கில் பணச் செலவு செய்து சாப்பாட்டுச் சாமான்களை சேகரித்திருக்கமாட்டார்கள். தயிர்பால் நெய் கறிகாய்களை ஸித்தப்படுத்தி யிருக்க மாட்டார்கள். கொறநாட்டு நடேசனை வாத்தியம் வாசிக்க ஏற்பாடு செய்திருக்க மாட்டார்கள். ஹரிகதாகாலக்ஷேபம் செய்ய ஸதாசிவமூர்த்திக்குத் தெரிவித்திருக்கமாட்டார்கள். முக்கியமாக வாத்தியாருக்குச் சொல்லி ஏற்பாடு செய்திருக்கவே மாட்டார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, வீட்டைப் பெருக்கிக் கோலமிட்டிருக்கவேமாட்டார்கள். மேலும் அந்தப்பெண்ணைப் பெற்றிருக்கவே மாட்டார்கள்.

இப்படியாக வீண்வம்பு கதைகளாலும் த்ரௌபதீதூஷணங்களினாலுமே நிறைந்தது பூர்வபக்ஷநூல் என்பதை யாவருமுணர்வர். .... .... .... (*)

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# த்ரௌபதீ ப்ரபத்தி ப்ரதிஷ்டா.

---

*ஸகவிம் கவியநவாயம் வாயயது ஸவடாம் வடாயந ஶாராம் ஶாராயது |*
*வரவாஷிஹயம்கரவாதராஜ: வரஶாணாவரா கூ உஜ்வலதி ||*

> கீழ் வியாக்கியானங்களின்வீறு என்கிற முதல் வியாஸமும், நாமும் நம்து நெஞ்சும் என்கிற இரண்டாம் வியாஸமும், திருவடிகள் விடாது, திண்கழலாயிருக்கும் என்கிற மூன்றும் வியாஸமும் த்ரௌபதியும் ப்ரபத்தியும் என்கிற நான்காவது வியாஸமும் ஒவ்வொன்றும் தனித்தனியே பூர்வபக்ஷியின் வாதங்களை அடியறுக்க வல்லது. அவ்வளவே போதும். ஆயினும் லோகோபகாரத்திற்கு இன்னமும் உபஹரிக்கப்படுகிறது.

1. *பூர்வபக்ஷநூல் சிறிய வுருவத்தில் 208 பக்கங்கள் கொண்டதாயினும் ஸ்வபக்ஷ ஸாதகமாகவோ பரபக்ஷ ப்ரதிக்ஷேபகமாகவோ இன்னது சொல்லிற்றென்று தெரிந்து கொள்ள முடியாத நிலையில் தோன்றியுள்ளது பூர்வபக்ஷஸித்தாந்தங்களைக் கலசிக்கலசி யெழுதியிருப்பதனாலும், புநருக்தி பஹுளமா யிருப்பதனாலும், பாஷையும் அபூர்வமாய் நூல் நடையும் ததோபி அபூர்வமாயிருப்பதனாலும் "இந்த பூர்வபக்ஷியின் நிரூபணம் இன்னது" என்று ஒருவராலும் நிலையிட வொண்ணாதபடி யுள்ளது. ஆனாலும், பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களில் யாவர்க்கும் தெளிவுபிறக்கும்படி இங்கு நாம் முக்கியமான விஷயங்களையெடுத்துரைக்கிறோம்.*

2. *ஸ்ரீவசநபூஷணத்திற்கும் முமுக்ஷுப்படிக்கும் வஸ்துத: விரோதமே கிடையாதாதலால் இந்த அர்ச்சைக்கு ப்ரஸக்தியே கிடையாதென்பது எமது முக்கியமான வாதம். இதை ஊர்ஜித மாக்கவே வியாக்கியானங்களின்வீறு என்கிற வியாஸம் இதில் முதன்மையாக அமைக்கப்பட்டுள்ளது. அஃதொன்றைமட்டும் வாசித்தாலே போதுமானது. அதனாலேயே நாம் க்ருதக்ருத்யர்களென்னத் தட்டில்லை. மூலக்ரந்தங்களுள் பரஸ்பர விரோதமோ, இதர க்ரந்தங்களோடு விரோதமோ காண்பதற்கு ஸ்வல்பம் இடமிருந்தாலும் எடுத்துக் கழிப்பது மணவாளமாமுனிகளின் அஸாதாரண ஸரணி யென்பதையும், அவர் இங்கு விரோதமிருப்பதாகவே திருவுள்ளம் பற்றாமையையும் விபுலமாக நிரூபித்திருக்கின்ற அந்த வியாஸமே இந்நூலுக்கு ஜீவநாடியென்பதைத் திடமாகக்கொண்டு தத்வஜிஜ்ஞாஸுக்கள் அதனையே ஆழ்ந்து நோக்கி ஆனந்திக்கக்கடவர்கள்.*

3. *வ்யக்ருத விசாரத்தில் பூர்வபக்ஷிகள் தலையாகக் கொண்டிருக்கும் விஷயம் ஒன்றேயொன்றுதான்; அதற்கே நூறுபக்கம் வளர்ந்துள்ளது. அஃது என்னென்னில்;*

"த்ரௌபதி ப்ரபத்தி செய்த காலத்தில் அவள் பலபல அபேக்ஷிதங்களைக் கோரியிருந்தாள்; அவையடங்கலும் நிறைவேறப்பெறாமல் வஸ்த்ரவ்ருத்தியாகிற வொன்றுதான் அப்போது கிடைத்தபலன்; இதனால் அவளுடைய ப்ரபத்தி பலிக்கவில்லை யென்பது வெள்ளிடை மலை யாகின்றதன்றோ."

என்கிற விதனையே பூர்வபக்ஷி ராமாஸ்த்ரமாகக் கொண்டிருக்கிறார். இது ஸர்வாத்மநா அஸங்கதமென்பதை நன்கு நிரூபிக்கிறோம் காண்மின். நடு நிலையில் நின்று பார்ப்பவர்களுக்கு இவ்விஷயத்தில் பரமத்ருப்தி ஏற்பட்டே தீரும். ஏற்பட்டு விட்டால் பூர்வபக்ஷவாதம் தொலைந்ததாம். இதில் த்ருப்தியுண்டாகவில்லை யென்றால் எம்முடைய வாதம் தொலைந்ததாம்.

## உயிரான விஷயத்தில் விமர்ச நிரூபணம்.

4. மஹா ஸபையில் மானபங்கமாகிற காலத்தில் அவளது நெஞ்சில் பல பல அபேக்ஷைகளிருந்தனவாகச் சொல்லுவதும் எழுதுவதும் யுக்தமன்று. உலகில் ஒவ்வொருவனுக்கும் எத்தனையோ வித்மான அபேக்ஷைகள் நெஞ்சில் குடிகொண்டிருக்கலாம்; உயிர் போகும் தருணத்தில் உயிர்ப்பிச்சை யொன்று தவிர வேறு எந்த அபேக்ஷையும் நெஞ்சில் நடையாட ப்ரஸக்தியேயிராது. எங்ஙனே யிருக்கும்? மாடமாளிகைகள் வேணும், மக்கள் மனைவிகள் வேணும், தினப்படி பஞ்ச பக்ஷ்ய பரமான்ன போஜனம் வேணும் .... என்றிங்ஙனே. ஒருவனுக்குப் பல பல வபேக்ஷிதங்களிருக்கலாம். அவன் உயிர் நீங்குமாபத்து வந்த வளவிலே உயிரொன்று தவிர வேறு எதையாவது அபேக்ஷிப்பனோ? த்ரௌபதிக்கு நேர்ந்த ஆபத்து மரண பர்யாயமென்பதில் தட்டுண்டோ? மரணத்திலும் மேம்பட்டதென்றும் சொல்லத்தகுமே. பகவத் கீதையில் அர்ஜுநனை நோக்கிக் கண்ணபிரான் கூறுமிடத்து * ஸம்பாவிதஸ்ய ச அகீர்த்திர் மரணாத் அதிரிச்யதே * என்று கூறியிருக்கவில்லையா? நல்லபடி வாழ்ந்தவற்கு ஒரு மானஹானி யேற்பட்டால் அது மரணத்திற்காட்டிலும் அதிசயித்ததென்றன்றோ இங்குக் கூறியிருப்பது. இத்தகைய நிலைமையிலே வர்த்திக்கின்ற த்ரௌபதி மானரக்ஷண மொன்று தவிர வேறு எதையும் நெஞ்சில் இட்டெண்ணியிருக்க மாட்டாளென்று சபதம் பண்ணிச் சொல்லலாமே. ஸகல ப்ரமாணங்களிலிருந்தும் விளங்குவது இவ்வளவு தானே.

5. * சங்கசக்ரகதாபாணே! * என்ற விடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் பூர்வபக்ஷிகளுக்குச் சிறந்த ஆதாரமிருப்பதாக ஒரு மருளுள்ளது. அதனையும் அடியறுப்போம். த்ரௌபதி தான் ரஜஸ்வலையாயிருக்கும்போதே கண்ணபிரான் சங்க சக்ரகதாபாணியாய் ஓடிவந்து காட்சி தரவேணுமென்று கோரியதாகவும், அப்படி ஓடிவாராமையினாலே ப்ரபத்தி பழுதாய்விட்டதாகவும் விவேகிகள் விளம்பமாட்டார்கள். இதைப் பற்றி "சங்கசக்ரகதாபாணே" என்றே மகுடம் புனைந்த வியாஸம் அடுத்த பக்கத்தில் (16ல்) வெளி வருகின்றது; அதனால் மிக்க தெளிவு பெறுவது. மூலத்திலுள்ள சப்தத்தை ரஸிகர்கள் வியாக்கியானிக்கும்போது அருளிச் செய்யுமவை அந்யதாஸங்கைகளுக்கு ஆஸ்பதமாகத் தகாது. ஓரிரண்டிடம் காட்டுவோமிங்கு.

6. ஸ்ரீராமாயணம் அயோத்யா காண்டத்தில் (16-28.) * தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநதரம் சுசிம் * என்ற ச்லோகத்தில் சுசிம் என்பதற்குப் பேரின்ப வெள்ளமாக வியாக்கியான மருளாநின்ற நம்பிள்ளை.

> "ஒரு ஸ்த்ரீகளையும் தீண்டலாகாது; தர்ம பத்நியாகையாலே பிராட்டியைத் தீண்டினால் வருவதொரு சேதமில்லையிறே; ஆனபின்பு அதொழியப் பரிஹரிப்பது என்றால், அது தன்னிலும் அதிசங்கை பண்ணி பிராட்டியுடைய திருப்பரிவட்டம் தாக்கினாலும் முழுகத் தேடாநிற்பர்" [ஈடு. 4-8-4]

என்றருளிச் செய்கிறார்; பெரியவாச்சான்பிள்ளையும் [நாச்சியார் திருமொழி 14—2. வியாக்கியானத்தில்] இதே ச்லோகத்தை விவரித்தருளுகையில்

"[சுசிம்.] ஒருவரையும் ஸ்பர்சிக்கலாகாது; பிராட்டி யொருத்தியையும் செய்யலாவ தில்லையிறே என்றால் அவள் தன்னை ஸ்பர்சிக்கிலும் அடுத்தடுத்து முழுகாநிற்பர்."

என்றருளிச் செய்துள்ளார். வஸிஷ்டாதிகள் பெருமானை நோக்கி நீர் ஒரு ஸ்த்ரீயையும் தீண்டலாகாது என்று நியமிக்கிறார்களாகவும், பெருமாள் பிராட்டியைக் கூட தீண்டலாகா தென்று மறுப்பதே வஸிஷ்டாதிகளுக்கு உத்தேச்யம் என்றுகொண்டு பிராட்டியின் சேலைத் தலைப்பு காற்றில் தம்மீது பட்டாலும் ஸரயுவிலே முழுகவேண்டி ஓடுவர் — என்பதாகவும் இங்குச் சொல்லப்படுகிறது. இதற்குப் பரமதாத்பர்ய மின்னதென்று கொள்ளாதவர்கள் இதில் ப்ரபலமான வொரு ஆக்ஷேபம் செய்ய முன்வரலாமன்றோ? (அதாவது) ஒரு ஸ்த்ரீயை யும் தீண்டலாகாதென்று வஸிஷ்டாதிகள் பெருமானை நோக்கிக் கட்டளையிட்டதாகச் சொல் லும் போதைக்குப் பெருமாள் ஸ்த்ரீகளைத் தீண்டுகிறவராக இருக்கவேணுமே. இல்லையாகில் அப்ரஸக்த ப்ரதிஷேதமாகுமே இது. கண்ணபிரானைநோக்கி இங்ஙனே கட்டளையிட்டார்க ளென்றால் * மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகிலவைகீறி நிச்சலுந்தீமைகள் செய்து திரியுமவனுக்கு இது அஸம்பாவித மென்று நினைப்பாரில்லை. * நீ உகக்கு நல்லவரொடு முழிதராயே * என்று நம்மாழ்வாரும், * கருமலர்க் கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித் தாங்கே யொருத்திதன்பால் மருவி மனம் வைத்து மற்றொருத்திக்குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப் புரிகுழல் மங்கை யொருத்திதன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை * என்று பலவும் ஸ்ரீ குலசேகரப் பெருமாளும், * ச்லிஷ்யதி காமபி சும்பதி காமபி ரமயதி காமபி ராமாம் * என்று ஜயதேவரும் மற்றும் பலரும் பேசநின்ற கண்ணபிரானை நோக்கி இங்ஙனே கட்டளையிட்டார்களென்றால் இது ஏற்கும். * ந ராம: பரதாராந் வை சக்ஷுர்ப்யாமபி பச்யதி * என்ன நின்ற பெருமானை நோக்கி இங்ஙனே கட்டளையிட ப்ரஸக்திதானுண்டோ? பிராட்டியின் சேலைத்தலைப்பு காற்று வீசி மேலே பட்டாலும் அடுத்தடுத்து முழுகப்போவர் பெருமாள் என்றதும் அவருடைய ஆசாரப்ரதாநதையை மட்டும் தெரிவிப்பதிலே நோக்குடையதேயன்றி வேறொன்று சொல்ல லாகுமோ? இக்காலத்திலும் பரமபவித்திரான வொருவரைப் புகழும்போது 'இவர் நெருப்பை யலம்புகிறவர்' என்று சொல்லுவதுண்டு. நெருப்பை யலம்பிவிட்டால் அது கொண்டு என்ன செய்யமுடியும்? ஒன்றுஞ்செய்ய முடியாதென்று தெரிந்து கொண்டவர் களும் "நெருப்பையலம்புகிறவர்" என்றே வ்யவஹரித்து வரக்காண்கிறோம். இங்கு தாத்பர்யமே யன்றோ உபஜீவ்யம்.

7. மற்றோரிடமும் காட்டுவோம். பெருமாள்திருமொழியில் (5–3.) * மீன் நோக்கு நீள்வயல்சூழ் * என்றவிடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸூக்தி—

"[மீன்நோக்கும் நீள்வயல்சூழ்] மத்ஸ்யமென்று பேர் பெற்றவையுடையக் கடாக்ஷிக்கும் தேசமாய்த்து. கடலில் மத்ஸ்யம் 'கடல்வற்றினால் நமக்குப் புகலிடம்' என்று நினைத் திருக்கும் தேசமாய்த்து"

என்றுள்ளது. மலைநாட்டுத் திருப்பதியான வித்துவக்கோட்டில் வயல்களானவை மீன்க ளால் நோக்கப்பட்டிருப்பதாக மூலமுள்ளது. மீன்கள் விரும்பி வாழுமிடமான வயல்க

ளாலே சூழப்பட்டதென்று எளிதாக உரை செய்துவிடலாம். வியாக்கியானமெங்ஙனே யுள்ளதுகாண்மின்; கடலில் வாழ்கிற மீன்கள் 'இக்கடல் வற்றிப்போனால் நாம் திருவித்துவக் கோட்டு வயலிலே புகுந்து வாழலாம் என்று நோக்குவதாக அர்த்தமருளிச்செய்யப்பட்டுளது. கடலில் நீர் வற்றிப்போனால் அதேக்ஷணத்தில் மீன்களும் முடிந்துபோக வேண்டியதேயல்லவா? கடல் எங்கிருக்கிறது? இந்த வயல் எங்கிருக்கிறது? கடலில்மீன் அங்கிருந்து புறப்பட்டு வித்துவக்கோட்டுவயலில் வந்து சேர்வது எங்ஙனம்? எத்தனை நாளில் வந்து சேரலாகும்?..........என்று இனைய கேள்விகள் கேட்டால் விடை தருவாருண்டோ? ரஸோக்திகளிலே கேள்வி கேட்பார்தாமுண்டோ?

8. இதற்குமேல் பூர்வபக்ஷி சொல்லக்கூடும்; அருளிச்செயல் வியாக்கியானங்களில் ரஸோக்திகளிருக்கும்; சாஸ்த்ரார்த்தமே வடிவெடுத்த ரஹஸ்யக்ரந்தங்களில் எதுவும் சாஸ்த்ரார்த்தமாயிருக்கவேணுமேயொழிய ரஸோக்தியாக எதையும் கொள்ளலாகாதே; "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்பது ரஹஸ்ய ஸ்ரீஸூக்தியாதலால் இதை கேவலம் ரஸோக்தியாகக் கொள்வதற்கில்லை. இது உண்மையான சாஸ்த்ரார்த்தமாகவே யிருக்கவேண்டும்; இதற்கு நாலாயிர வியாக்கியானங்களிலுள்ள ரஸோக்திகளைக் காட்டலாகாது—என்று. ரஹஸ்ய நூல்களில் சாஸ்த்ரார்த்த விபரீதங்களான ரஸோக்திகள் அணுவளவும் கிடையாது. "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது, திண்கழலாயிருக்கும்" என்கிற சூர்ணையே இதற்குச்சான்று. இதைப்பற்றிக் கீழே விவரித்தாயிற்று.

---

# "சங்கசக்ரகதாபாணே!"

9. த்ரௌபதியின் விருத்தாந்தத்திற்கு முதன்மையான பிரமாணம் மஹாபாரதம். எந்த ஆசார்யரும் சரித்திரங்களைச் சொல்லுமிடத்து இதிஹாஸ புராணங்களைப் பின்பற்றிச் சொல்லக்கடவர்களே யல்லது தாங்கள் சுதந்திரமாக வொன்றும் சொல்லகில்லார். அந்த மஹாபாரதத்தில் த்ரௌபதி ப்ரபத்திபண்ணினதும் அதனால் புடவை சுரக்கப்பெற்றதும் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்க 'புடவை சுரந்தது ப்ரபத்தியின் பலனாகவன்று' என்று சொல்லும் வார்த்தையானது மஹாபாரதம் நடையாடும் நாட்டில் விலை செல்லக் கூடியதன்று. மஹாபாரதத்தில் ஸபாபர்வாவில் தொண்ணூறுமத்யாயத்தில் நாற்பத்திரண்டாம் சுலோகத்தில் த்ரௌபதி ப்ரபத்தி செய்தமை தெரிவிக்கப்பட்டுள்ளது. நாற்பத்தெட்டாம் சுலோகம்வரை அவளுடைய ஆர்த்தியின் கனம் விவரிக்கப்பட்டது. உடனே * தஸ்ய ப்ரஸாதாத் த்ரௌபத்யா: க்ருஷ்யமாணே அம்பரே தத:, தத்ரூபமபரம் வஸ்த்ரம் ப்ராதுராஸீதநேகச:.* என்று ப்ரபத்தியின் பலனாகவே புடவை சுரந்த சரிதை பேசப்பட்டது. கதையின் தத்துவம் இங்ஙனே நிஸ்ஸந்தேஹமாயிருக்க, ப்ரபத்தி விபலமாய்ப் போய்விட்டதென்று ஒருவர் சொன்னால் 'ஸ்ரீவசநபூஷணத்தோடு மஹாபாரதத்தோடு வாசியற எல்லாப்ரமாணங்களையும் புறக்கணிப்பவரேயிவர்' என்று அறுதியிடத்தட்டில்லை.

10. * சங்கசக்ரகதாபாணே! த்வாரகாநிலயாச்யுத, கோவிந்த புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணாகதாம் * என்கிற மஹாபாரத ச்லோகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை யிட்டரு

ளின தனிச்லோக வியாக்கியானத்தில் பூர்வபக்ஷிகள் தமக்கு ஏதோ ஸாதகமிருப்பதாக ப்ரமித்திருக்கும் ப்ரமம் நன்கு தவிர்க்கப்படுகின்றது. அங்கு [ரக்ஷ மாம்] என்று ப்ரதீக மெடுத்து "ரக்ஷிக்கையாவது விரோதியைப் போக்குகையும் அபேக்ஷிதங்களைக் கொடுக்கையும்" என்றுரைத்து, மேலே (சரணாகதாம்) என்றதன் விவரணத்தில் "இவளுக்கு வஸ்த்ரவர்த்தநமும் சத்ருஸம்ஹாரமும் அபேக்ஷிதம்" என்றருளிச் செய்தார். உடனே பலிக்கவேண்டிய தாக த்ரௌபதி நினைத்ததும் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம் பற்றினதுமான வஸ்த்ர வர்த்தநம் உடனே பலித்தது. சத்ருஸம்ஹாரமும் அதேக்ஷணத்தில் பலிக்கவேணுமென்று நினைத்ததுமில்லை, நினைக்கக் கூடியதுமன்று. மூலை முடுக்குகளில் அமுங்கிக்கிடக்கிற துர்வர்க்க மெல்லாம் திரளவேணும்; தூது நடந்தானென்ற பெருமை பெறவேணும்; * பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேரை நடத்திப் பார்த்தஸாரதியென்று பேர் பெறவேணும்; கீதாசார்யனென்கிற பட்டப் பெயர் பெறவேணும். முக்கியமாக மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் நூற்றுவரும் மற்றும் பலரும் திரளவேணும். பாரதப் போர் பதினெட்டுநாள் நிகழ்ந்ததென்கிற ப்ரஸித்தி விளையவேணும். இவையொன்று மின்றிக்கே. அவள் ரஜஸ்வலையாயிருக்குமக்காலத்திலேயே கண்ணபிரான் ஓடிவந்து சத்ருஸம்ஹாரத்தை ஒரு நொடியில் பண்ணிவிட்டுத் தன்னடிச் சோதிபுக்கிருக்கவேணுமென்றும், அப்படியாகாமையி னாலே ப்ரபத்திபலிக்கவில்லையென்று கண்டோமல்லவா? கண்டோம் என்றும் எழுதுகிறவர்களைப் பொருள் படுத்தி நூலெழுத எம்பெருமான் நம தலையிலெழுதினனே யென்று எத்தனை காலம் நிர்வேதப்பட்டாலும் இதற்கு சாந்தியே பிறவாதுகிடீர். *ப்ரஸீத ப்ரஸீத ப்ரஸீத* என்று வேண்ட வேண்டியது ஈதொன்றே.

11. * ராவணஸ்ய வதார்த்திபி: தேவை: அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந: * என்னும வால்மீகி வசனத்தில் * சங்க சக்ரகதாபாணே! * என்னும் ச்லோகத் திற்போலே வ்யஞ்ஜநாவ்ருத்தியாலன்றிக்கே ஸுஸ்பஷ்டமாகவே — வாச்யமாகவே — கண்ணோக்கமாகவே ராவணனை வதம் செய்யவேணு மென்கிற ப்ரார்த்தனை விளங்கச் சேய்தேயும், தாடகா தாடகேய வராத ஷணாதி நிரஸநம் பண்ணுவதற்கு முன்னமே அநாயாஸேந ராவணனை முடிக்கவல்ல ஆற்றல் பெருமாளுக்குக் குறையற்றிருக்கச் செய்தேயும் ஏன் அந்த ஆற்றல் உபயோகிக்கப்படவில்லை யென்று கேட்கிறோம்; இவ்வளவுமன்றிக்கே ராவண ஸம்ஹாரம் வெகு ச்ரமப்பட்டுச் செய்ததாகவும் காட்டப்பட்டுள்ளது? அகஸ்த்யர் வந்து ஆதித்யஹ்ருதயம் உபதேசிப்பதும், * ஸுத்ருணாகேஸ ராகவம் வப்ருஷ * என்பதும் * ஸராவணகராகம் வா ஜமத ஹ ஷ்ய * என்பதும்......இதெல்லாம் எதற்காக? தேவர்கள் ப்ரபத்தி பண்ணின க்ஷணத்திலேயே ராவண ஸம்ஹாரத்தைச்செய்து முடிக்க ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு ஆற்றலில்லையா? * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்.......ஸம்பவாமி யுகேயுகே * என்றவனுக்கு சரணாகதிதான்வேணுமோ?......என்றிப்படிப்பட்ட கேள்விகளுக்கு ஸமாதாநங்களைக்கூறி விவேகிகளை உகப்பிக்க வல்லவர்கள் த்ரௌபதி விஷயத்தில் எவ்விதமான கூசோத்யங்களையும் நெஞ்சாலும் நினைக்கமாட்டார்கள். 'ஸந்திக்கையான ஸ்ரீரஹிணிக்குக் கால்பட்டால் குற்றம் கைபட்டால் குற்றம்' என்றொரு லோகவசனமுண்டு. அந்தரீதியில் உகப்புக்கு இலக்கன்றிக்கே வெறுப்புக்கு இலக்கானர் திறத்திலேயன்றோ உபாயத்திற்குக் கண்ணழிவு சொல்லுவது. "அர்ஜுநனுடைய தோஷங்களையெல்லாம் ஹோமதீமாகக் கொள்ளுகைக்கு த்ரௌபதிபக்கல் பக்ஷபாதமே காரணம்" என்று ஸுப்ரஸித்தமான விஷயத்திற்கு அத்யந்த விருத்தமாகவன்றோ இந்த வாதமெழுந்துள்ளது.

12. பூர்வபக்ஷநூலில் உள்ள விசேஷமாவது, ஒரேவிதமான வாக்கியங்களைச் சிறிதும் ஸங்கோசப்படாமல் அடிக்கடி யெழுதி வருவது: (அதாவது) "இதுவரையில் கூறிய விஷயங்களைக் காணுமவர்க்கு............(P. B A.) கூறியிருக்கும் விஷயங்கள் பொருத்தமுடையன வல்ல என்பது நன்கு புலனாம்" என்பதே. இத்தகைய நிரர்த்தகவாக்கியங்களைக் காண்பவர்கள் விவேகிகளாயிருந்தால் "இவர் என்ன கூறினார்? என்ன நிரஸிக்கப்பட்டுவிட்டது?" என்று ஆராயாமற்போகார். "பாட்டில் அப்படியிருக்கிறது, ஈட்டில் இப்படியிருக்கிறது; அதை கவனிப்பது, இதைக்காண்பது. இதுமுக்கியமாக அனுபவிக்கத்தக்கது. இது கூறாமலே விளங்குமன்றோ. இதைக்கண்டோமல்லவா? இது வெள்ளிடைமலை" என்றிப்படி சில வரிகளை யெழுதிவிட்டு "இவற்றால் ........ பொருத்தமுடையனவல்லவென்பது வெள்ளிடைமலையல்லவா?" என்றெழுதுவதுதான் புத்தகம் நிரம்பியுள்ளது. அந்தோ! இப்படியும் ஒரு நூலுண்டோ? இத்தகைய வாக்கியங்களைக்கண்டு மயங்கிப்போவார் நிகழும் விலம்பி வருஷத்திலுமா இருப்பர்கள்? அவர் சொல்லும் விஷயமின்னது, இவர்சொல்லும் விஷயமின்னது— என்றிவ்வளவுகூட ஆராயமாட்டாதவர்களுக்கா பூர்வபக்ஷநூலில் விஷயம் தெரிவிக்கப்படுகிறது? நாம் முக்கியமாகவும் ப்ராஸங்கிகமாகவும் எழுதியுள்ள விஷயங்களுள் ஒன்றுக்காவது நேர்மையான பரிஹாரமோ ஸமாதானமோ தெரிவித்தது உண்டா? என்பதை ஆழ்ந்து நோக்குமறிவுடையார் நூலின்போக்கை அறிந்தேயுள்ளார்கள்.

13. (பக்கம் 159-ல்) எழுதுகிறாரிவர்—"த்ரௌபதிக்கு எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யாதானாய் நினைத்துக் குறைவாளனாய்ப் புண்பட்டிருந்தான் கண்ணனென்பதை நாமும் இல்லைசெய்து பேச முன்வரவில்லை" என்று. இப்படி எழுதுமிடங்களில் "ஆனால், ஆனாலும், ஆயினும்" என்று தொடங்கி அஸந்தர்ப்பமான சிலவார்த்தைகளை யெழுதுகிற மாமூலுண்டேயிவர்க்கு. அந்தரீதியில் இங்குமெழுதுகிறார். ப்ரக்ருத விசாரத்தில் இவர் தலையாகக்கொண்டிருக்கும் விஷயம் ஒன்றேயொன்றுதான். அதையே திருப்பித்திருப்பி எழுதிவருகிறார். (அதாவது)—த்ரௌபதி ப்ரபத்திசெய்தகாலத்தில் அவள் பல பல அபேக்ஷிதங்களைக் கோரியிருந்ததாகவும், அவையடங்கலும் நிறைவேறப்பெறாமல் வஸ்த்ரவ்ருத்தியொன்றே பெற்றதாகவுங்கூறி, இதனால் ப்ரபத்தி பலிக்கவில்லையென்பது ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றதல்லவா? என்று. இது ஸர்வாத்மநா அஸங்கதமென்பதைக் கீழே பரக்க நிரூபித்தோம்.

— **பெரியாழ்வார் திருமொழி வியாக்யான ஸ்ரீஸூக்தி ரத்னம்.** —

14. இன்னமும், மணவாளமாமுனிகளின் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியான ஸ்ரீஸூக்திக்கும் விருத்தமென்பதை மூதலிக்கிறோம். அதில் (4-3-6) *பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம், ஆண்டங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்த அப்பன் மலை * என்றவிடத்து

> "[அப்பன்] சரணாகதையான த்ரௌபதிக்குச் செய்த உபகாரம் தமக்குச்செய்ததாக நினைத்து 'அப்பன்' என்கிறார். ஆச்ரிதரிலே ஒருவர்க்குச் செய்ததும் தமக்குச் செய்ததாக நினைத்திராதவன்று பகவத்ஸம்பந்தம் இல்லையாகக்கடவதிறே."

என்று.

இந்த ஸ்ரீஸூக்திகளைக்காண்பவர்கள் த்ரௌபதியின் சரணாகதி விபலமாய்விட்டதென்று வாய்திறக்க வழியுண்டாவென்று விமர்சிக்கவேணும்.

15. *சங்கசக்ரகதாபாணே* என்கிற ச்லோகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திலுள்ளதெல்லாம் இவர்க்கு மிகவும் விருத்தம். இங்கு * தொழுங்காதல்களிறளிப்

பான் புள்ளூர்ந்து தோன்றினையே; அப்படியே கூராராழிவெண்சங்கேந்தி வந்தருளித் தனக்கு முகங்காட்டவேணுமென்று கருத்து—என்றருளிச் செய்திருப்பதை நோக்கிக் கலங்கினவிவர் உடனேயுள்ள ஸ்ரீஸூக்திகளை ஸேவித்துத் தெளியலாகாதா?

"பின்பு இவளுக்காகவிறே? * ஸவாணுஜஔ நூரஉஅூ—தவகூவாய—நா * ஹூ உயாகிவூ உாஜயகூ என்று * கலங்கச் சங்கம் வாய்வைத்ததும், * ஆழிகொண்டன்றிரவி மறைத்ததும், * கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப்போர் எல்லாச் சேனையுமிருநிலத்தவித்ததும்"

என்றருளிச் செய்யப்பட்டுள்ளதே. காலக்ரமேண கிடைக்கக்கூடியவற்றையும் த்ரௌபதி வ்யங்க்யமாக ப்ரார்த்தித்தாள் என்பதன்றோ விளக்கப்பட்டது.

16. பூர்வபக்ஷநூலில் இது வொருபெரியபூர்வபக்ஷம்; (அதாவது) "த்ரௌபதி கோவிந்த நாமத்தினால் ரக்ஷிக்கப்பட்டாளேயல்லது ப்ரபத்தியினால் ரக்ஷிக்கப்படவில்லை. அதாவது கண்ணனால் ரக்ஷிக்கப்படவில்லையென்றபடி. கண்ணனால் ரக்ஷிக்கப்பட்டது உண்மையாயிருந்தால் அவள் வேண்டிக்கொண்ட காலமாகிய ரஜஸ்வலாகாலத்திலேயே கஜேந்திரனுக்குப்போல கண்ணன் நேராக வந்து காட்சிதந்து எல்லாரையும் கொன்று அவளை ரக்ஷித்ததாய் சரித்திரம் காணப்படவேணும்; அப்படி சரித்ரமில்லாமையால் கண்ணன் ரக்ஷிக்கவில்லை யென்பது வெள்ளிடைமலை—என்று. இந்த வாதம் எங்ஙனேயிராநின்றதென்னில்,

கீதையிலே ஒரு ச்லோகத்தை யெடுத்துக்காட்டி 'இப்படியன்றோ கண்ணனருளிச்செய்திருப்பது' என்றாரொருவர். 'இப்படியன்றோ கீதா சாஸ்த்ரம் சொல்லியிருப்பது' என்றார் மற்றொருவர். 'இவ்விரண்டு வாக்யத்திற்கும் பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகக் காண்கிறதன்றோ' என்று கூறி ஒரு வித்வான்—கண்ணனருளிச் செய்தானென்பது நமக்கு அத்யந்தம் பரோக்ஷமாகையாலே அப்படிச் சொல்லுவது தவறு; கீதாசாஸ்த்ரத்திலிருப்பது நமக்குப்ரத்யக்ஷமாகையாலே கீதாசாஸ்த்ரம் சொல்லியிருப்பதாகக் கூறுவதே மிகப் பொருத்தமானது. இவ்வண்ணமாகவே, நம்மாழ்வாரருளிச் செய்தார், திருமங்கையாழ்வாரருளிச் செய்தார், பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்தார்........என்றிப்படி யெழுதுவது தவறு. 'திருவாய்மொழி சொல்லிற்று; பெரியதிருமொழி பகர்ந்தது; ஸ்ரீவசநபூஷணம் பேசிற்று' என்றே சொல்லவேண்டும். என்று சிக்ஷித்தாராம் ஒரு மஹான்.

இதெல்லாம் மெய்யாயிருக்குமா? என்கிறசங்கை அறவே தீர்ந்துவிட்டதிப்போது. உலகுக்கு உபதேசம் செய்வதாக வெளிவருகின்ற மஹான்கள் இப்படி தம் நெஞ்சில் தோற்றினதை யெல்லாம் ஏடுபடுத்திவைப்பது ஏலாது என்று உபதேசிப்பாரொருவருமிலரேயென்று உலகம் வருந்துகின்றது. த்ரௌபதியைத் திருநாமம் ரக்ஷித்தது என்றாலும், ப்ரபத்தி ரக்ஷித்தது என்றாலும், அவளுடைய ஆர்த்தநாதம் ரக்ஷித்தது என்றாலும், இன்னும் எந்த விதமாகச் சொன்னாலும் 'கண்ணபிரான் ரக்ஷித்தான்' என்கிற பரமார்த்தமொன்று தவிர வேறு எதுவும் தேறாதென்பதை இவர் நித்ய ஸந்த்யாவந்தநஸ்தானத்தில் வைத்துச் சிந்தனை செய்வது நலம். * ஹுஉத உவவெதூ * என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தில் ஸித்தாந்தம் செய்யப்பட்ட அர்த்தம் இவர்க்கு விஷமாயிருப்பதுபற்றி வருந்துகிறோம். ஹட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரஶதகத்தில் * கி யாதஅகிவஅா......ஐதிரஂஹெஶ! கூஉஜஶஃ * என்று நிரஸித்தருளின குத்ருஷ்டிகளின் திரளிலே சேர விரும்பியிருப்பது என்ன ஸிநோலிபியோ? திருநாமம் ரக்ஷிக்கிறதென்றால் திருநாமமுடையவன் ரக்ஷித்தானென்பது தவிர வேறில்லையென்பதை ஹட்டர் ஸஹஸ்ரநாம ஹாஷ்யத்தில் உபபாதித்தருளியிருப்பதும் இவர்க்கு விஷமாய்விட்டதே.

## இவருடைய மருள்மொழிகள் பலவற்றை யெடுத்துக் களைதல்.

17. ஸ்ரீவசநபூஷணத்தில் "முக்யமதுவே" என்றொரு சூர்ணையுள்ளது. இதன்பொருள் யாதெனில்; நம்மாழ்வாரருளிச்செய்த * என்னான் செய்கேன் * என்கிற பாசுரத்தில் அஜ்ஞானமூலகமும், ஜ்ஞாநாதிக்ய மூலகமும், ஶக்திபாரவஶ்யமூலகமுமான ப்ரபத்தி தமக்குண்டென்று காட்டப்படுவதாக முன்னம் நிர்வஹித்து, இம்மூன்றும் அங்கு ப்ரபத்திகாரணமாகிறதோவென்று ஶங்கித்து, அவ்விடத்தில் ப்ரபத்தியானது ஶக்திபாரவஶ்யத்தையே தனக்கு ஹேதுவாகப் பற்றியிருக்குமென்று கூறி, இந்த மூன்று ஹேதுக்களடியாகவரும் ப்ரபத்திகளில் ஶக்திபாரவஶ்யமடியான ப்ரபத்தியே முக்கியமென்று அருளிச் செய்தாராயிற்று. "உ-வஶ்ம் அதுவே" என்கிற ஸ்ரீவசநபூஷண சூர்ணையின் கருத்து இதுவாயிருக்க, இவர் (அல்லது) இந்த நியாய வேதாந்த வித்வான் "ஆழ்வாருடைய ப்ரபத்தியே முக்கியம்; த்ரௌபதிசெய்த ப்ரபத்தி உபயோகமற்றது" என்கிற தாத்பர்யத்தில் அந்த சூர்ணை அவதரித்ததாகக் காடுபாய்ந்து எழுதுகிறார். "இல்லையில்லை, ஒருகாலும் அப்படியில்லை" என்பர். ஆழ்வாருடைய ப்ரபத்தியானது பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தை லக்ஷியமாகக் கொண்டது; தர்மபுத்ராதிகளின் ப்ரபத்தியைப் பேசுங்கால் ஆழ்வாருடைய ப்ரபத்தி நினைவுக்கு வரவேண்டிய ப்ரஸக்தியே கிடையாது. விஷயத்தை விட்டு விலகி நெடுந்தூரத்தில் சென்று, நினைவுக்கு வருமவற்றையெல்லாம் எழுதிக்கொண்டு போமவர்க்கு விடைகூற வெள்கவேண்டியிருக்கிறதே. முக்கியமாகச் சில விஷயங்களை யெடுத்து அலசுவோம்.

## அதிகாரிவிஶேஷண ப்ரஸ்தாவ ப்ரத்யவஸ்தானம்.

18. பூர்வபக்ஷிநூலில் (பக்கம் 205 உபக்ரமத்தில்) எழுதப்பட்டுள்ளது—

"தேசிகன் அருளிச்செய்த ரஹஸ்யநூலில் ப்ரபத்தி ஸ்வீகாரிவிஶேஷணமென்று கூறும் பக்ஷத்திற்கு ஸம்மத லக்ஷணம் கூறமுடியாதென்று ஒரு தூஷணம் கூறப்பெற்றிருக்கிறது. அந்த தூஷணத்திற்குப் பரிஹாரம் செய்யவேண்டிய பொறுப்பு நமக்கு உண்டு. அந்த அநுமத லக்ஷணஶரீரத்தில் திருநாமத்தை ஓர் உறுப்பாய்க்கொள்ள இடம் ஏற்படாது. கொள்ளில் மாநஸமான பற்றுதல், காயிகமான பற்றுதல், ஸவஶரணம் என்பதை மாத்திரம்கூறி வாக்கினால் பற்றும் பற்றுதல் ஆகிய இம்மூவகைப்பற்றுதல்களுக்கு ஸங்கிரஹம் ஏற்படாதென்பது வெள்ளிடைமலை. இந்த விஷயம் மிகப்பெரிதாதலின் விரிவஞ்சிச் சுருக்கமாய் ஸூசநம் செய்திருக்கிறோம்."—என்று.

இந்த வாக்கியங்களைக் காணும்போதே நாம் திண்ணமாக எண்ணினதென்னவென்றால், ப்ரபத்தியை அதிகாரி விஶேஷணமாக அருளிச்செய்த ஆசாரியர்களின் திருவுள்ளத்தையும் அதை மறுத்துரைத்த கவிதார்க்கிக கேஸரியின் கருத்துப் போக்கையும் இந்த பூர்வபக்ஷி ஈஷத்தும் அறிந்திலர் என்பதே. "அந்த தூஷணத்திற்குப் பரிஹாரம் செய்யவேண்டிய பொறுப்பு நமக்கு உண்டு" என்று இவர் எழுதுவதுதான் மிகவற்புதம். நமது பூர்வாசாரியர்களின் கொள்கைகளில் இதர மதஸ்தர்கள் எத்தனையோ தூஷணங்கள் கூறியிருக்கிறார்கள், நாடோறும் கூறிக்கொண்டுமிருக்கிறார்கள். இதுகாறும் ஒன்றுக்காவது இவர் பரிஹாரம்செய்ய நெஞ்சினாலாவது நினைத்தவரோ? ஶக்திதானுடையவரோ? ப்ரபத்தியை அதிகாரிவிசேஷணமென்றது பிசகு-என்பதை ஸ்தாபிக்கவே இவர் ஸஹிருசியுள்ளவர் என்பதன்றோ ப்ரஸித்தம். "ஸம்மதலக்ஷணம் கூறமுடியாது என்று ஒரு தூஷணம் கூறப்பெற்றிருக்கிறது" என்று இவர் எழுதும்போதே இந்த விஷயத்திற்கு இவர் ஸுதராம் வைதேஶிகர் என்பது விளங்க

வில்லையா? ஶ்ருத விசாரத்தில் அதிதராம் அப்ரஸக்தமான விஷயங்களையே இவர் பலபல வாக எடுத்து ஏடுகளை நிரப்பியுள்ளாராதலின் அத்தகைய விஷயங்களிலே இதுவுமொன்று; ஆயினும் இதில் வக்தவ்யங்களை விளங்கச்சொல்லுவோம். ரஹஸ்யத்ரயஸாரத்தில் (சரமச்லோ)

"ஸித்தோபாயத்தைப்பற்ற ஸாத்யோபாயம் வ்யாஜமாத்ரமாய் இது ப்ரதானமன்றிக்கே நிற்கிற நிலையைப்பற்ற 'ஸம்பந்த ஜ்ஞானமாத்ரம், ஸித்தோபாயப்ரதிபத்திமாத்ரம், அநிவாரணமாத்ரம், அநுமதிமாத்ரம் அசித்வ்யாவ்ருத்திமாத்ரம், சைதன்யக்ருத்யம், சித்தஸமாதானம், அதிகாரிவிஶேஷணம்' என்றிப்புடைகளிலே அதிவாதம்பண்ணினார்கள். இவ்வந்ய பரோக்தியைக்கொண்டு இவைதானே அர்த்தமென்று அறுதியிடவொண்ணாது. இவை யெல்லாம் (ஶரணம்வ்ரஜ) என்கிறவிதிக்கு விருத்தங்களாம். அதிவ்ரஸம்ஹாதிதோஷங்களு முண்டு. ..........வ்ரஜ என்று விதேயமாய் ஶக்த்யாதிகளன்றிக்கே யிருக்கிற வித்தை அதிகாரி விஶேஷணமென்னவொண்ணாது. ........."

இத்யாதிகள் எழுதிவைக்கப்பட்டுள்ளன. நிக்ஷேபரக்ஷையில் * ஶக்த்யாதிஹேதோ விஹிதஸ்ய ப்ரவ்ருத்தி ஹேதுத்வாத் விதேயாத் ஸாத்யாதிகாரிவிஶேஷணம் ॥ * என்றொரு காரிகையுமெழுதப்பட்டது. இந்த ஸம்ப்ரமங்களெல்லாம் பண்டே அடியறுக்கப்பட்டன. ஸ்ரீமத் பரமஹம்ஸ. எம்பார்ஜீயர் * ஶக்த்யாதிஹேதாவப்ரஹிதஸ்ய ப்ரவ்ருத்திஹேதோர்ந்யாய் । விதேயாத்ஸ்வஸ்யாப்யதிகாரிவிஶேஷணம் * என்றார். அதுகிடக்க.

உதாரதீ ரஸதீரவணவித்க்ஷணயான் கீர்த்திமூர்த்தி. சிங்கப்பெருமாள் ஸ்வாமி

## ஸ்ரீராமாநுஜஸித்தாந்த ப்ரகாசிகையில்,

"எப்படி ஜ்யோதிஷ்டோமாதி ஸ்தலங்களில் ஸ்வர்க்காமனையானது நியதவேதப்ரவ்ருத்தியாயிருந்தபோதிலும் யஜநகர்த்தாவான அதிகாரிக்கு விஶேஷணமாயிருப்பதால் அந்த ஸ்வர்க்காமனைக்கு ஸாதநத்வமில்லையோ அப்படியே இங்கும் ஶரணவரணம் அதிகாரி விஶேஷணமாயிருப்பதால் அதற்கு ஸாதநத்வமில்லாமையால் அது ஹேதுவாகமாட்டா தென்று கண்டுகொள்வது. அப்படி அதிகாரி விஶேஷணமாகச் சொல்லும்பக்ஷத்தில் *ஸித்தவைஷம்யப்ரவ்ருத்த நியோஜ்யஸ்ய விஶேஷணம் * என்பதால் அதிகாரி விஶேஷணமாயிருப்பது ஸித்தமாகவேயிருக்கவேணுமென்றேற்படுவதால் * மாமேகம் ஶரணம் வ்ரஜ * என்று விதேயமாகச் சொல்லுவது கூடாதேயென்னில், அந்த நியமம் ஸாத்யோபாயவிஷயமாகையால் ஸித்தோபாய விஷயத்தில் விரோதிக்காது. ... .... .... *

என்று விரிவாகப்பணிக்கப்பட்டுள்ளது. * தண்டேன்நுகரா மண்டூகம் தண்டாமரையினுடன் பிறந்தே * என்னும்படியிருப்பார்க்கு அதுகொண்டு பயனில்லை. இவ்விஷயத்தில் நாம் அதிகாரிவிஶேஷணமீமாம்ஸா என்றொரு க்ரந்தம் விரைவில் வெளியிடுவோமாதலால் இங்கு இதுபற்றின விரிவு அநபேக்ஷிதமென்று நிற்கிறோம். இந்த அவஸரத்துக்கு இங்கு ப்ரஸக்தியேயில்லை.

## ஸ்ரீமதுபயவே. K. S. க்ருஷ்ணன்ஸ்வாமியின் திருநாவீறு.

ஜகத்விக்யாதராய் மேதாவி குல திலகராய் புதுடில்லியில் வாழும் ஸ்ரீமத், டாக்டர் ஸர். பத்மவிபூஷணம். K. S. க்ருஷ்ணன்ஸ்வாமிகள் நிகழும் மார்ச்சுமீ 21, 22 தேதிகளில் காஞ்சி மாநகர மெழுந்தருளியிருந்து அடியேனுடைய க்ருஹத்தை பாவநமாக்கி இரண்டு நாட்களிலும் இரண்டு உபந்யாஸங்களை அநுக்ரஹிக்க ப்ராப்தமாயிற்று. ச்ரோதாக்களனைவரும் பேரின்ப வெள்

ளத்தில் ஆழ்ந்து கிடக்க நேர்ந்தது. அப்போது ஸூக்ஷ்மமாக ப்ரகரத பூர்வபக்ஷ நூலைப்பற்றிக் கால்மணிகாலம் அம்ருதமயமாக உபந்யஸித்தார். அப்போது ஸாதித்த வார்த்தைகளில் ஸாரமாகச்சில வற்றை ஈண்டு வெளியிடுகிறோம். "இந்த பூர்வபக்ஷ புத்தகம் எனக்கும் அனுப்பப்பட்டிருந்தது. வாசித்துப்பார்த்ததில் 'உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது' என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியே நினைவுக்கு வந்தது. ஆனால் ஒரு விசேஷம், அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில்—தத்வநிர்ணயம் பண்ணின உய்யக் கொண் டார்........க்கு அருளிச்செய்த வளவிலே 'அர்த்தஸ்திதி அழகியதாயிருந்தது; ஆகிலும் அத்தைவிட்டு இத்தைப்பற்றத்தக்க ருசி எனக்கில்லை' என்று அந்த உய்யக்கொண்டார் சொன்னதாகவும் அதற்கு ஸ்வாமி 'நீ வித்வானாகையாலே அர்த்தத்துக்கு இசைந்தாய், பகவத் ப்ரஸாதமில்லாமையாலே ருசி பிறந்ததில்லை' என்று அருளிச்செய்ததாகவும் காண்கிறது. உண்மையான வித்வானாயிருந்தால் 'அர்த்தஸ்திதிக்கு இசைந்தாய்' என்னும்படியான நிலைமையை யாவது பெற்றிருக்கலாம். ப்ரக்ரு தத்தில் அதுதானுமில்லை யென்பதுதான் விசேஷம். என்று ஸாதித்துவிட்டு, பிள்ளைலோகாசார்ய ருடைய அஷ்டாதச ரஹஸ்யங்களுள் ஒன்றான தனித்வயமென்னும் ரஹஸ்யத்திலிருந்து கீழ்வரும் பங்க்திகளை ஸதஸ்ஸில் வாசித்துக் காட்டி அனைவரையும் ஆனந்தக் கடலில் ஆழங்காற்படச்செய் தனர். அந்த பங்க்திகளாவன்;—

"த்ரௌபதியும் அந்த பெரிய ஸபையிலே துச்சாஸநனென்பானொரு முரட்டுப்பயல் வாசாமகோசர மான பெரிய பரிபவத்தைப்பண்ண, தர்மம் ஜயிக்கிறதென்றிருந்த பார்த்தாக்கள் ஐவரும், தர்ம மில்லை யென்றிருந்த நூற்றுவரும், தர்மாதர்மவிவேகம் பண்ணமாட்டாத த்ரோண பீஷ்மாதிகளும் ........ஆன ஸபையிலே ப்ரபத்தியை வெளியிடப்பிறந்த பாக்யவதியாகையாலே." இத்யாதிகள்.

ஸர்வஜ்ஞரான பிள்ளை லோகாசார்யர் இத்தனை கௌரவமாக அருளிச்செய்திருக்க, அந்த ப்ரபத்தி பலிக்கவில்லை யென்று வழியல்லாவழிகளில் பேசியும், அந்த ப்ரபத்தியை ப்ரயோகித்த விலக்ஷணாதி காரிணியான த்ரௌபதியை வாய்வந்தபடி தூஷித்தும் வெளிவந்திருக்கிற புத்தகத்தில் ஒரு எழுத்தி லுங்கூட ஸாரமில்லாமையாலே * கலை அறக்கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதான் * என்ற கணக்கிலே உபேக்ஷித்திருப்பதுதான் யுக்தம். என்று ஸாதித்துத் தலைக்கட்டினார்.

*ஸ்ரீக்ருஷ்ணன் ஸ்வாமியின் உபந்யாஸத்திறமைக்கு உகந்த ஸதஸ்யர்கள் ஸித்த தர்மஜ்ஞர் என்னும் விருதை அந்த மஹானுக்குச் சூட்டினார்கள். அனைவரும் கரகோஷம் செய்ய உபந்யாஸம் முற்றுப் பெற்றது.*

## பூர்வபக்ஷியின் அசட்டு வார்த்தைகள்.

* கோவிந்தேதி யதாக்ரந்தத் * *என்று கண்ணபிரான் குறைபட்டுச் சொன்ன சொல்லை அடிக்கடி யெடுத்துக்காட்டியுள்ளது பூர்வபக்ஷபுத்தகம். உலகில், யாசகர்களுக்கு விசேஷ மாகக்கொடுத்த பெருவள்ளல்கள் தாங்கள் கொடுத்ததை ஒரு கொடையாக நினையாதே 'அந்தோ! என்ன கொடுத்தோம்! ஒன்றும் கொடுக்கப்பெற்றிலோமே!' என்று மிகவும் குறை வாளராகவே பேசுவது இயல்பு. ஒன்றும் கொடாத க்ருபணர்கள் விசேஷமாகக் கொடுத்து விட்டதாகப் பொய்சொல்லித் திரிவர்கள். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் — * ஒன் றுண்டு செங்கண்மால் யானுரைப்பது, உன்னடியார்க்கு என்செய்வனென்றே யிருத்திநீ * என்று எம்பெருமானை நோக்கியருளிச் செய்கிறார். அடியார்களுக்கு வேண்டினபடியெல் லாம் செய்து தலைக்கட்டியுங்கூட 'ஒன்றும்செய்யவில்லையே! என்ன செய்வோம்!' என்று திருவுள்ளம் நொந்திருப்பதே எம்பெருமானுடைய இயல்பு என்று காட்டுகிறார். ஹட்டரும் ஸ்ரீரங்கநாச்சியாரை நோக்கி* "ஐச்வர்ய மக்ஷரகதிம் ...... விதீர்ய, *அஸ்மை ந கிஞ்சிதுசிதம்*

க்ருதமித்யாரம்ப! த்வம் லஜ்ஜஸே கதய கோயமுதார ஹாவ:!'' என்கிறார். இத்தகைய வசனங்களைக் காணும்போது, 'கோயம் குண:!' என்று நாம் உருகவேண்டுமத்தனைபோக்கி "இவற்றால் திவ்யதம்பதிகள் அடியார்களுக்கு ஒன்றும் செய்யவில்லையென்பது வெள்ளிடைமலையல்லவா'' என்று பேசுவதும் எழுதுவதும் விவேகிகளின் பணியன்று. அசடுகளின்பணி.

பிறந்தவாறும் என்று பேசி ஆறுமாதம் மோஹித்திருக்குமாழ்வார் தாமும் எம்பெருமானைப் பிறப்பிலி யென்றும் பிறவாத பேராளனென்றும் பலவிடங்களில் பேசுகிறார். அவன் பிறந்தானென்பது உண்மையா? பிறந்திலனென்பது உண்மையா? என்று நாம் கலங்கும்படியாகவன்றோவுள்ளது. மேகம் எவ்வளவோ வர்ஷித்தும் 'என்னவர்ஷித்தோம்! ஒன்றும் வர்ஷிக்கவில்லையே!' என்றே குறையுற்றிருக்குமாபோலே எம்பெருமான் தானும் எங்நின்ற யோனியுமாய்ப் பிறந்தும் 'அந்தோ! நாம் என்ன பிறந்தோம்! என்ன செய்தோம்! பிறக்க அடியிட்டோமத்தனைபோக்கிப் பிறந்தோமில்லையே! ஒன்றும் செய்தோமில்லையே!' என்று நினைத்திருக்குமவனாகையாலே அவன் நினைவையிட்டுப் பிறப்பிலி யென்னவும் தட்டில்லை யென்கிறார்கள். * மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய்க் கானாரேனமுமாய்க் கற்கியாம் என்றருளிச்செய்த நம்மாழ்வார் உடனே * இன்னம் கார்வண்ணனே * என்கிறார். இங்கு நம்பிள்ளை யீடு;—

"வர்ஷுக வலாஹகம்போலே யிருக்கிறானத்தனை; வர்ஷித்தானாயிருக்கிறிலன். வண்ணம் — ஸ்வபாவம்.''

என்று. இங்ஙனே மஹாகுணங்களைக் காட்டியுருகவைக்குமெம்பெருமான் * ருணம்ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி * என்றருளிச்செய்த உதாரமான திருவாக்கைக்கொண்டு த்ரௌபதிக்கு ஒன்றும் செய்திலனென்றும், அவளுடைய ப்ரபத்தி பழுதாய்விட்டதென்பது இதனால் வெள்ளிடைமலையென்றும் இவர் எழுதுவதடைய வாசாமகோசரம் காணாமையை ப்ரதிஷ்டிதமாக்கி நிற்குமத்தனை. ஸாதாழ்வான் சித்ரகூடத்திலிருந்து மீளுகையில் * ஸமேவ்ய ஸஹராம் ஹரோஷ: * என்கிறபடியே ஹர்ஷத்தோடுதான் அயோத்திக்குத் திருப்பினான். * ஸகாச நவகாவெதூ * என்னுநிற்கச்செய்தேயும் பாரதந்த்ரியம் ஜீவிக்கப்பெற்றதற்குப் போரவுகந்து மீண்டானாகையாலும், பாரதந்த்ர்யரக்ஷணத்திற்காகவே அவன் அவதரித்தவனாகையாலே அவனுடைய க்ருதக்ருத்யதைக்குக் கொத்தை சொல்லவொண்ணாமையாலும் அவன் பேறுபெற்றவனே யென்பது நம் ஆசார்யமோஷ்டியில் அந்தரங்கமான கொள்கை. எனினும், பெருமாள் * பரிஹாயா அதஸ்ஸோ வஞ்நம் நக்ருதம் மயா * என்று கண்ணீர் பெருக நின்று பேசினதற்கும் விஷயமுண்டு. எவ்வளவுசெய்தும் ஒன்றும் செய்திலனாகவேயெண்ணி நிவேதத்தைக் காட்டும் மஹாகுணஶாலியின் திருவாக்கைக்கொண்டு ஒருவரும் ஒருபேறும் பெற்றிலரென்று ஸ்தாபிக்க இவர்தாம் உத்தமாதிகாரி.

## — ஸத்ஸம்ப்ரதாய பரமரஹஸ்யமொன்று —

தீமைகளே வடிவெடுத்த சேதனர்கள் பக்கலிலே சில பல நன்மைகளுமுண்டாயிருந்தாலுங்கூட * எந்நன்றி செய்தேனா * என்றும் * இடகிலேனொன்றட்டகில்லேன் * என்றும் * பாவமே செய்து பாவியானேன் * என்றும் தன்னுடைய ஆகிஞ்சந்யத்தையே புரஸ்கரித்துக் கொண்டிருக்கவேண்டியவன் இவன்; இத்தலையில் ஒன்றையும் எதிர்பாராதே தன் பேறாக எல்லாம் செய்து தலைக்கட்டினாலும் ஒன்றும் செய்யப் பெற்றிலேனே யென்று இழவாளனாய் உள்ளதனையும் நோவுபட்டிருப்பதே அவன் தனக்கு ஸ்வரூபம்.

"நன்மையென்று பேரிடலாவதொரு தீமையுங்காணாதே நெற்றியைக் கொத்திப்பார்த்தால் பசைகாணாதொழிந்தால் அப்ராப்ய மென்று கண்ணநீரோடே மீளுவது, தனக்கேற இடம் பெற்றவளவிலே என்னூரைச் சொன்னாய் என்பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்றாப்போலே சிலவற்றை யேறிட்டு மடிமாங்காயிட்டு......."

இத்யாதி ஸ்ரீவசநபூஷண திவ்ய ஸூக்திப்படியே ஸாமான்ய ஜனங்களிடத்திலும் யாத்ருச்சிக ப்ராஸங்கிக ஆநுஷங்கிகாதி ஸுக்ருதங்களைக் கொண்டு காரியம் செய்து போரு மவனான பரமபுருஷனுடைய மஹா குணத்திற்கு நிறக்கேடாம்படி த்ரௌபதியின் ப்ரபத்தி பழுதாய் விட்டதென்று எடுத்துக் கழிக்கவும் தகாத ஒரு அபார்த்தத்தை ப்ரவசநம் செய்வ தற்கு இவரே அதிகாரி.

எழுதுகிறார், தம்முடைய அஸம்பத்தவாதத்தை நிலைநாட்டிக் கொள்ளத் தமக்கு அபரி மிதமான ப்ரமாணங்கள் இருப்பதாகவும், 'பெரியோர்பணிப்பர்' என்பதொன்றே நமக்கு ப்ரமாணமாகவும். (அத்ராஹ்யைதே.) ஸ்ரீமத் சிங்கப்பெருமாள் ஸ்வாமி ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்தில் பகவத் விஷயப்ரவசநம் செய்தருளும்போது நம்பங்குரிச்சியில் நடந்த இதி ஹாஸ மென்று ஒன்று ஸாதிக்கக் கேட்டிருந்தேன் ;—

த்வாதசியன்று ஸூர்ய க்ரஹணம் பிடித்தால் பாரணையான பிறகு தர்ப்பணமா? தர்ப் பணமான பிறகு பாரணையா? என்று விசாரம் வந்ததாம். த்வாதசியாகையாலே பாரணைக்குத்தான் ப்ராதாந்யம் என்கிறாராம் ஒருவர்; அடிக்கடி வருகிற த்வாதசியிற் காட்டிலும் கதாசித் வருகிற க்ரஹணத்திற்குத்தான் ப்ராதாந்யமதிகம் என்கிறாராம் மற் றொருவர். இப்படியாக விவாதம் மிகமிக வளர்ந்துவிடவே சேனங்குளத்தில் சென்று ஒரு பெரியவரை மத்யஸ்தராக வைத்துக் கேட்டார்களாம்; அவர் ஸாதித்தாராம்; விச்வா வஸு வருஷத்தில் இப்படி ஸம்பவித்தபோது ப்ரபலமான விவாதம் ஏற்பட்டது. அப் போது தர்மசாஸ்த்ர நிர்வாஹகாக்ரேஸரராயிருந்த அடியேனுடைய மாமனார் ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீவசநபூஷணாதி வ்யாக்கியானங்களையும் நாலாயிர வியாக்கியானங்களையும் மற்றும் ஸ்ரீராமாயண ஸாரதாதிகளையும் நன்றாகப் பரிசீலனைபண்ணி ஏழெட்டு ஸஞ்சிகைகள் எழுதியிருக்கிறார்; த்வாதசியின் ப்ராதாந்யம் எவ்விதத்திலும் போகமாட்டாதாகையாலே பாரணையான பிறகே தர்ப்பணம் செய்ய ப்ராப்தமென்றே நிர்ணயித்தார். பெரியோர்க ளெல்லாரும் அப்படித்தான் அநுஷ்டித்தார்கள்; ஸ்ரீவைஷ்ணவர்மட்டுமன்றிக்கே மன்னார் குடி மஹாதேவ சாஸ்த்ரி சிஷ்ய ப்ரசிஷ்யர்களும் இந்த நிர்ணயத்தையே ஆதரித்தார்கள் என்றாராம். மாமனார் எழுதிவைத்த ஸஞ்சிகைகளையும் சுமைசுமையாகக் காட்டினாராம்.

இந்த ரீதியில் இவர்கொண்ட மஹாஸாஹஸத்திற்கு அபரிமிதமான ப்ரமாணங்கள் கைகொடுக்கு மென்பதில் தட்டுண்டோ? தமக்குத் தலையான ப்ரமாணம் அரும்பதங்கள் என்கிறார். இஃது ஓரிடத்திலன்று பலவிடங்களில். அரும்பத மென்றால் இன்னது பொருளென்றுகூட அறி யாதவிவர் நமக்கு ப்ரதிவாதியாக அமைந்ததுண்டே, இதுதான் நம்முடைய மஹாஸாஹஸம்.

## — இவர் ப்ரயோகிக்கும் அரும்பதபதத்தின் அசட்டுத்தனம் —

அரும்பதமென்று எதற்குப் பெயரென்றால், வியாக்கியான நூல்களில் காணும் பொருள் விளங்காத கடின பதங்களுக்குப் பெயர், அவற்றுக்கு அண்ணவப்பங்கார் எம்பார் ஜீயர்போல்வார் எழுதியுள்ள விவரணங்களுக்கு அரும்பதவுரை யென்றும் அரும்பத

விளக்க மென்றும் பெயர். சிறுவர்களுமறிந்த இந்த வாசியைக்கூட அறியாதே அண்ணாவப்பங்காரரும்பதம், எம்பார் ஜீயரரும்பதம் என்று திருப்பித் திருப்பி எழுதி வம்பு வாக்ஜாலங்களை நிரப்பியுள்ள இவரா நமக்கு ப்ரதிபக்ஷியாக நிற்கத்தக்கவர். இது நமக்கு எந்த ப்ரஹார பலனோ தெரியவில்லையே. "சொல் நோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும்" என்னும்படியானவற்றில் ஒன்றுக்கும் லவலேஶமும் ப்ரஸக்தியற்றதாய் கேவலம் ஹாஸ்யரஸத்திற்கே இலக்காய் எழுதிவைத்த புத்தகத்திற்கு தேவரீர் மறுப்பு எழுதவேணுமோ? என்று வானமாமலை வித்வான்கள் விடுத்த ஸ்ரீமுகம் ஸ்ரீமுகமாலையில் வெளிவரும். ... ... .... *

த்ரௌபதீ ப்ரபத்தி ப்ரதிஷ்டை முற்றிற்று.

---

ஸ்ரீ:

# பெரியபெருமாளின் திருவுள்ளம் என்னே!

பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்றவெம்பெருமானாகிய செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் இப்போது ஒருவகையான லீலாரஸம் கொண்டாடத் திருவுள்ளம்பற்றி ஸகல ஜகத்திலுமுள்ள ஸகலபக்தர்களினுடையவும் ஹ்ருதயத்தைப் பரிதாபமயமாக்க வேண்டித் தம்முடைய திருமேனியைத் தாபமயமாக்கிக்கொண்டசெய்தியை நாடும் நகரமும் நன்கறிந்திருப்பதால் அதை நாம் இன்னமும் விவரிக்கத்தேவையில்லை. "அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது பேரேன் என்றிருக்குமிடம் அர்ச்சாவதாரம்; அதில் தலையானது திருவரங்கம் பெரியகோயில்" என்று நம் ஆசார்யர்கள் அருளிச்செய்யும்படியான நிலைமைக்கு ஒருகாலும் மாறுபாடு விளைய ப்ரஸக்தியில்லை.

யார்செய்த எந்த அபசாரத்தின் பயனோ! எந்த அபராதத்தின் விளைவோ! என்ன நிக்ரஹ ஸங்கல்பமோ! அன்றி அநுக்ரஹப்ரணாளியேயோ! ஒன்றுமறுதியிடமாட்டாதே தவிக்கின்றது தாரணி. பலவாயிரமாண்டுகட்கு முன்பு நம்மாழ்வார் இப்பெருமாளையே நோக்கி "என்செய்கின்றாயே!—என் செய்திட்டாயே!—என் சிந்தித்தாயே!—என்கொலோ முடிகின்றது?" என்று கேட்ட கேள்விகளையே இப்போது நாம் கேட்க நேர்ந்திருக்கின்றது. யார் எதுகேட்டாலும் வாய்திறந்தொன்று பணிக்குமவனல்லனே!

ஸ்ரீவசநபூஷணத்தில் (ஸூ. 84ல்) பிள்ளை திருநறையூரரையர் உடம்பை யுபேக்ஷித்த வரலாறொன்று காட்டப்பட்டிருக்கின்றது. ஆயிரமாண்டுகட்கு முன்பு நடந்த செய்தி அது. தொட்டியம் திருநாராயணபுரமென்று (திருச்சி ஜில்லாவில்) ப்ரஸித்தமான க்ஷேத்திரத்தில் வேதநாராயணப்பெருமாளை ஸேவிப்பதற்கென்று பிள்ளை திருநறையூரரையர் ஸகுடும்பமாகச் சென்றபோது பரஸமயிகள் அந்தக்கோயிலிலே தீயை வைத்திட, உள்ளிருந்தவர்களெல்லாரும் புறப்பட்டு ஓடிப்போக, அந்த எம்பெருமான் திருமேனிக்கு அழிவுவருகிறபடியைக்

கண்டு ஸஹித்திருக்கமாட்டாத ப்ரேமாதிசயத்தாலே அந்த அரையர்தாமும் ஒக்க முடிவதாக அத்யவஸித்து, தீப்பற்றியெரிகிற திருமேனியைத் தழுவிக்கொண்டு நிற்க, பிள்ளைகளும் அப்படியே தழுவிக்கொள்ள எல்லாரும் அத்திருமேனியிலேயே முடிந்து பிழைத்ததாக வியாக்கியானத்தில் இதிஹாஸம் விவரிக்கப்பட்டுள்ளது.

இத்தகைய விபத்து உலகுக்கெல்லாம் ஓருயிரான பெரியபெருமாளுக்கு ஸம்பவித்ததென்றால் * போவதே நோயதாகி * என்று தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச்செய்த கணக்கிலே நமக்கெல்லாம் உயிர் தன்னடையே தொலைந்திருக்கவேண்டும். * உண்டிராக் கிடக்கும்போதும் உடலுக்கே கரைந்து நையுமவர்களாக மங்களாசாஸனம் பெற்றிருக்கின்ற நமக்குத் திருநறையூரரையர் நிலைமை வாய்ப்பது எங்ஙனம்? இச்செய்திகேட்டும் சிறிது கண்ணீர்கூடப் பாயவிடாதே கிடக்கும் பாவிகளன்றோ நாம்.

இந்த நிர்வேத விண்ணப்பத்தை மதுரேண ஸமாபநம் பண்ணுகிறோம். * அப்பொழுதைக்கப்பொழுது ஆராவமுதமான பெரியபெருமாள் திருமேனிக்கு அதிகமான அவத்யம் நேரவில்லையென்றும், மேல்திருப்பணி விரைவாகவே நடந்து வருகிறதென்றும், மூன்று மாதங்களுக்குள் திவ்யமங்கள விக்ரஹஸேவை குறையொன்றுமின்றிச் செவ்வனே கிடைக்குமென்றும் அமுதச்செய்தி அறியக் கிடக்கின்றது. பக்தபாகவதோத்தமர்களனைவரும் அகமகிழ்ந்து உள்ளங் குளிர்ந்திருக்கவேணும்.

நிர்வாஹ அதிகாரிகளுக்கு ஒரு வேண்டுகோள். அநாதி யென்கிற சொல்லுக்கு முக்கிய லக்ஷ்யமான இந்தத் திருமேனிக்கு ஒருவருடைய சிந்தைக்கும் கோசரமல்லாத அவத்யம் நேர்ந்துவிட்டதனால் சாஸ்திர ஸம்பிரதாயங்களுக்கு ஒரு குறையுமில்லாத முறையில் சுத்தி காரியங்களை ஒழுங்காகச் செய்வித்தல் நன்று. ... ... ... ... *

"அடியார்கள் வாழ அரங்க நகர்வாழ."

"ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய."



ஸ்ரீமதுபயவே. ஸ்ரீபெரும்பூதூர் வித்வத் ஸார்வபௌம (வைகுண்டவாஸி)
ஆஸூரி ராமாநுஜாசார்ய மஹாஸ்வாமியின் காலக்ஷேபகோஷ்டி

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாய நம: ஸ்ரீமத்வரவரமுநயே நம:

# சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றியின்

## ஸுவர்ண கவசம்

[த்ரௌபதீப்ரபத்தி விஷயமான கலக்கங்களைப் போக்கி மிக்க தெளிவு பிறப்பிக்குமது]

श्रीमद्वरवरमुनये गुणगणनिधये सदा नतिं कलये ।
यत्सूक्तिकल्पलतिका काङ्क्षितमखिलार्थमनुपदं दिशति ॥

मायिमतङ्गजमस्तककोटीपाटनपाटलपाणितलो यः ।
श्रुत्यटवीकुहरेषु समिन्धे स प्रतिवादिभयङ्करसिंहः ॥

1. சென்ற மாதத்தில் அடியேன் வெளியிட்ட *திருவாக்குவெற்றியின் முதல் ஐந்து மலர்களை ஸ்ரீவைஷ்ணவ வுலகம் முழுவதும் கண்டு களித்துள்ளது. களிப்பின் மிகுதியை அடியேனுக்கு ஸ்ரீமுகங்களினால் தெரிவித்தவர்களும் தெரிவித்துக் கொண்டிருப்பவர்களும் பலர். அவர்கள் யாவரும் ப்ரக்க்யாதர்களும் பரிகணிதர்களுமான ப்ராஜ்ஞர்களேயாதலால் அவர்களின் ஸ்ரீமுகங்களை வெளியிடவேண்டியது ஆவச்யகமே. அதனால் தத்துவப்பொருள் விளக்கமும் உலகுக்கு நன்கு விளையும். ஆனாலும் அது இப்போது அநவகாசபராஹதமாய் நிற்கின்றது. கோதா நிலைய வெளியீடாக நமக்குக் கிடைத்த இரண்டு நூல்களுள் ஆராய்ச்சித் திரள் என்னும் சிறு சுவடியில் கண்ட விஷயங்களெல்லாம் மருளுமிருளும் வடிவெடுத்தவை யென்பது மறுவாய் திறக்க இடமின்றியே மூதலிக்கப்பட்டதாயிற்று. இப்போது “த்ரௌபதியும் திருநாமமும்” என்னுஞ் சுவடியில் காணும் விஷயங்களும் அத்தகையனவேயென்று மூதலிக்கப்படுகின்றது.

2. இங்கு வாதிப்ரதிவாதிகள் இன்னாரென்பதை இருவகுப்பு நூல்களும் ஸ்பஷ்டமாகக் காட்டிக்கொடாதிருப்பினும் உலக முழுவதும் உள்ளபடி உணர்ந்தேயுள்ளது. இந்த வாதவிவாதத்தில் ப்ரதிஸம்பந்தியான வ்யக்தி விசேஷத்தை அடியேன் அவர் இவர் என்றே குறிப்பிட்டு வருவேன். அவர் என்றால் எவர்? என்று ஒருவரும் கேளார். *அவனே அவனும் அவனுமவனும், அவனே மற்றெல்லாமு மறிந்தனமே* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் அவன் அவன் என்றது எவனை? என்று வேதாந்திகள் கேட்கமாட்டார்களன்றோ.

### நமக்குக் கிடைத்த பெரியார் ஸ்ரீமுகமொன்று.

3. உயர்ந்த நீதிபதி ஸ்தானத்தை நெடுங்காலம் வஹித்திருந்து விச்ராந்தி பெற்றுச் சென்னையில் வாழ்பவரான ஒரு மஹநீயர் சென்ற வாரத்தில் அடியேனுக்கு அருளியவொரு ஸ்ரீமுகத்தின் ஒரு சிறு பகுதியை மட்டும் ஈண்டு அநுவதிக்கிறேன். அந்த மஹநீயருடைய திருநாமத்தை இங்கு வெளியிட்டாலும் அவர் வெறுப்படையார், உகந்தே யிருப்பர். ஆனாலும் சிலர் அந்த மஹானுக்கு இன்னலிழைக்கத் தொடங்குவர்களென்னு மதிசங்கையினால் அவரது பெயரை வெளியிடுகின்றிலேன். விஷயந்தானே முக்கியம்; வக்தா யாராயிருந்தாலென்ன?

“தேவரீருடைய திருவாக்கு வெற்றி நூலைப் பெற்றுப் பன்முறையும் வாசித்து மகிழ்ந்தேன். இந்த நூல் சென்னை முழுவதும் பரவியிருப்பதால் யாவருமே இதைப் பெரிய விருந்தாகப்பெற்று மகிழ்ந்து வருகிறார்களென்று தெரிகிறது. சில நண்பர்கள் அடியேனிடம் வந்து பேசுகையில் தேவரீருடைய நூலைப்பற்றி

அவர்கள் கூறினதையும் அதற்கு அடியேன் விடைகூறினதையும் சுருக்கமாக விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். 'காஞ்சீபுரம் ஸ்வாமி எடுத்துக் காட்டும் விஷயங்களுக்கு தேவலோகத்திலிருந்து ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதியே வந்தாலும் மறுப்புரைக்க முடியாதென்பது சிலாலிகிதமான விஷயம்; எதிரிகளும் இசைந்த தன்றோ இது. ஆகவே விஷயங்களில் புகுந்து நாங்கள் ஒன்றும் பேசவரவில்லை. அந்த ஸ்வாமி அத்வைதிகளையும் இதர கலையார்களையும் தாக்கி வருகிற முறை யிலேயே ப்ரக்ருத விவாத ஸ்வாமியையும் தாக்கி யிருப்பதாகத் தெரிகிறது. இது வேண்டியதில்லையே. ஸஜாதீயரென்கிற கௌரவத்தைப் பாராட்டியே சப்தங்களை ப்ரயோகித்திருக்கலாமே; அப்போதும் விஷயத்தின் வெற்றிக்குக் குறையிராதே' என்று அவர்கள் சொன்னார்கள். அதற்கு அடியேன் உடனே தெரிவித்த தென்னவென்றால், அந்த ஸ்வாமி வெளியிட்ட ஆராய்ச்சித் திரள் பக்கத்திலேயே யிருந்தது. அதில் பரீக்ஷண நிரீக்ஷண மென்கிற மூன்றாவது ஆராய்ச்சியின் முகப்புவாசகங்களை யெடுத்துக்காட்டி வாசிக்கச் சொன்னேன். ஸ்ரீராமாநுஜனில் தேவரீர் வெளியிட்டிருந்த புநர்வஸுபரீக்ஷண மென்கிற வியாஸத்தை அந்த ஸ்வாமி யெடுத்து பதிலெழுதத் தொடங்குகையில் 'அதி லுள்ள அதிக ப்ரஸங்கங்களுக்கு நாம் விடை கூற முன்வரவில்லை .......' இத் யாதியாக வெழுதியிருந்ததை வாசித்துவிட்டு மூக்கில் விரலை வைத்து நாக்கையும் பல்லால் கவ்வி 'ஆகா! இப்படியா எழுதி யிருக்கிறார்? இவரை ஸாதுவென் கிறார்களே. ஸாது ஸாது வென்ற பாம்பு சாகக் கடித்த தென்கிற கதையா யிருக்கிறதே! இவருக்கு இவ்வளவும் வேண்டியது தான், இன்னமும் வேண்டி யதுதான், அதிக ப்ரஸங்கித்தனமென்று பாமரர்கள் பேசுகிற பேச்சையா இவரு மெழுதியிருக்கிறார்! என்று மாய்ந்து போனார்கள். அப்போது அடியேன் தேவரீருடைய புநர்வஸு பரீக்ஷண ஸஞ்சிகையையு மெடுத்து அவர்கள் கையிலே கொடுத்து, அதிக ப்ரஸங்கித்தனமாக இதில் என்ன எழுதியிருக்கிறது? நீங்களே பார்த்துச் சொல்லலாமே என்றேன். அது மிகச் சிறிய வியாஸமே யாதலால் க்ஷணத்தில் வாசித்து விட்டு, இதில் ஒரு அதிகப்ரஸங்கமும் காண வில்லையே; அவருடைய வியாஸம் நீரஸமானது என்று கண்டிருக்கிறது; இதைத்தான் அவர் அதிக ப்ரஸங்கமாக நினைத்தார் போலும். பேசுவதும் நீரஸம், எழுதுவதும் நீரஸம் என்று ஒவ்வொருவரும் சொல்லிக்கொண்டிருப்பது தானே; ஆனாலும் உள்ளதைச் சொன்னால் நொள்ளைக் கண்ணிக்கு நோப்பா ளந்தானென்று சொல்லிக்கொண்டே யெழுந்து சென்றார்கள். அதிக ப்ரஸங் கங்களென்று அவர் எழுதியிருந்ததை தேவரீர் அத்யந்தம் உபேக்ஷித்த கார ணம் தெரியவில்லை. அதற்கு விசேஷமான பதில் வெளிவருமென்று எதிர் பார்த்திருந்தோம். அதை தேவரீர் கணிசிக்கவில்லை போலும்."

இவை அந்த ஸ்ரீமுகத்திலுள்ள சில வாசகங்கள். விஷயங்களில் வாய்திறக்க வொண்ணாதபடி செய்துவிட்டு அதிக ப்ரஸங்கமென்றோ அதனப்ரஸங்கமென்றோ இவரெழுதியிருந்தால் நன்றேயாம். ஒரு விஷயத்திலுங்கூட அதற்கு இவர் இப்பிறப்பில் பாக்கியம் செய்திலர் என்பதைப் பன்முறையும் கூறுவோம்.

4. "இங்கு முக்கியமான தொன்றே; அதிக ப்ரஸங்கங்களுக்கு விடைகூற முன்வரவில்லை" என்றெழுதி "அவசியம் பரிஹரிக்கத் தக்கவொரு விஷயத்தை மாத்திரம் எடுத்துக்கூறி மறுத்து நிற்பதாக" எழுதினார். பரிஹரிக்கத் தக்கதாக இவர் நினைத்த விஷயம் எது? எங்ஙனம் பரிஹரித்தார்? என்பதை யன்றோ விவேகிகள் நோக்கவேணும். கட்டிலில் என்பதில் தம்முடைய மருளே யொழிய மாமுனிகளின் சர்ச்சைக்கு இடமில்லை என்று இந்த ரஹஸ்யார்த்தமேயன்றோ இவர் தெரிவித்தது. இதைத் தெரிவிக்க நாலு பக்கமெழுதி வைத்தார். இவரு டைய அதிகமான ப்ரஸங்கம் சுஷ்கவிஷயம், அல்லது நிர்விஷயமென்று முடிந்தது.

## இவருடைய விரோத பரிஹாரம் ஸுதராம் அப்ரஸக்தம்.

5. நம்முடைய ஜகதாசார்ய ஸூக்தி ஸுதா நிதியில் (பக்கம் 18ல், பாரா 40) "ஸ்ரீவசநபூஷண ஸூக்தியும் முமுக்ஷுப்படி ஸூக்தியும் உண்மையில் பரஸ்பரவிருத்தமாகத் தோன்றும்படி யிருந்தால் மணவாள மாமுனிகளே விரோத சங்கையைக் கிளப்பிப் பரிஹாரப்ரகாரத்தைக் காட்டியிருப்பர். வியாக்கியானத்திற்கு இது முக்கியமான க்ருத்யம். வஸ்துத: இங்கு விரோதப்ரஸக்தியே இல்லாமையினுல்தான் மாமுனிகள் சங்காஸமாதானங்களில் ப்ரவர்த்திக்கவில்லை. ஆங்காங்கு விரோதம் தோன்று மிடங்களில் ப்ரஸங்கித்துப் பரிஹாரம் காட்டியருளியே யிருக்கிறுர் மாமுனிகள்—என்பது விசதம்."

என்றெழுதப்பட்டுள்ளது. ப்ரக்ருத விவாதத்தில் இதுதான் தலையான விஷயம். இதைப்பற்றி இவர் எள்ளளவேனும் விடைகூறியிருப்பதுண்டா? இல்லை. லௌகிக வ்யவஹாரங்களில் "அட்மிஷன் கோர்ட்டிலேயே தள்ளுண்டது" என்று சொல்லும்படி ப்ரபல வாவதூகர்கள் செய்து வைப்பதுண்டு. அதுபோலவே, விரோத பரிஹாரமென்று இவர் வாய்திறக்கவே இடமில்லாதபடி நாம் செய்து வைத்திருக்கிறேம். இதற்கு இவர் என்ன விடை கூறினர்? மணவாளமாமுனிகளின் திறமையை இவருமறியார், எவருமறியார். *பாலில் கிடந்ததுவும் பண்டரங்கமேயதுவும், ஆலில் துயின்றதுவுமாரறிவார்—யானறிந்தவாறு* என்று துணிந்து கூறத் திருமழிசைப் பிரானெருவரே முன்வந்தது போல, மாமுனிகளின் திறமைத் திறத்தில் துணிந்து கூற அடியேனெருவனே முன்வரவல்லேன். இவரும் நாமும் இதில் இவ்வளவு போராடவேண்டிய விரோத மிருந்தால் மாமுனிகளா அதை ப்ரஸங்கித்துப் பரிஹரித்தருளாது விட்டிடுபவர்?

**ப்ரக்ருத விசாரத்தில் உயிரான விஷயங்களைப்பற்றி நமது விரிவான வியாஸங்கள் 'வியாக்கியானங்களின்வீறு' 'நாமும் நமது நெஞ்சும்' இத்யாதி மகுடம் புனைந்தவை முதலிலேயே இதில் வெளிவந்திருப்பன மீண்டும் காணத்தக்கன.**

---

## மிக முக்கியமான ஸாரவார்த்தையொன்று.

6. இவருக்கு ஆப்தரான ஸ்ரீ உ.வே. பிள்ளைலோகம் பாஷ்யகாரர் ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி திருவத்யயந கோஷ்டியில் ஸாரமாகச் சொன்னராம்;—"துணிந்து முன் வந்து விட்டார்; இதைப்பற்றி ஓயாமல் எழுதுவதற்கென்றே ஒரு ரீம் காகிதம் வாங்கி விட்டார் இத்தனை வெள்ளைக் காகிதத்தையும் கறுப்பாக்கித் தீர்த்துவிடுவதென்று துணிந்துவிட்டார். கடைசியாக முன்போல் '..........காலக்ஷேப கோஷ்டியார்' என்று அநாமதேயத் துண்டு ப்ரசுரங்களை வெளியிட்டு ஆசை தீர வைது விடுவதாகவும் தீர்மானித்து விட்டார். இனி சக்ரம் சுழன்று கொண்டே யிருக்கும்; ஓயாது" என்று. இதைக்கேட்ட பலரும் மிகவுகந்தார்களாம். இது நமக்கு ஸாக்ஷாத்தாகத் தெரியாது; அவருடைய ஸ்யாலர் அநுவதிக்கக் கேட்டதத்தனை.

## ப்ரக்ருத விவாதத்தில் இவருடைய விருத்த பாஷணங்கள்.

7. "ப்ரபத்திசரீரத்தில் திருநாமஸங்கீர்த்தனம் ஓர் உறுப்பாய் உள்ளது என்பதை ஒப்புக்கொள்வோம்" என்கிறுர். (பக்கம் 17-ல் இது காணலாம்.) ஒப்புக்கொண்ட பிறகு வாய்மூடி நிற்பதற்குமேல் கர்த்தவ்யமுண்டா என்பதைத் தாமே விமர்சிக்கலாமே. உடனே (ஆனுலும்) என்று தொடங்கி "வஸ்த்ர விருத்தி ப்ரபத்தியின் பயனன்று என்று தேறிய பின்பு இதைக்குறித்துக் கூறும் ஐககண்ட்யம் (P. B. A. வியாஸம்) பயனற்றதன்றே" என்கிறுர். இந்த வார்த்தை எங்ஙனேயிரா நின்றதென்னில்;

சசவிஷாணம் உண்மையில் கிடையாதென்பதை ஒப்புக்கொள்வோம்; ஆனாலும் சசவிஷாணம் சசவிஷாணம் என்கிற சொல் உலகமெங்கும் அடிபட்டுக்கொண் டிருப்பதால் சசவிஷாணம் கிடையாதென்று கூறுவது பயனற்றதன்றோ? என்கிற மஹா மேதாவியின் வார்த்தை போலேயிரா நின்றது.

8. மேலே (பக்கம் 206ல்) "மேற் கூறிய விஷயங்களைக் காணும்போது திருநாமஸங்கீர்த்தனம் ப்ரபத்தியில் ஓர் உறுப்பு என்னும் பட்சம் நிலைத்துநிற்காது" என்கிறார். இந்த வார்த்தை எங்ஙனே யிராநின்றதென்னில்; "சசவிஷாணம் உண் மையில் கிடையாதென்பதை ஒப்புக்கொள்வோம் என்றதும் நிலைத்து நிற்காது" என்னும் வார்த்தைக்கு ஸஹோதரமாகவே யிராநின்றது.

## 9. இதற்குமேல் மற்றொரு விநோதம்;

"ப்ரபத்தியோ திருநாம ஸங்கீர்த்தனமோ பயன் அளிக்காது, பரமனே பயன் அளிப்பவன் என்று (P. B. A.) கூறுவதை நாம் இல்லை செய்து பேசவில்லை" என்கிறார். இதையும் அதே பக்கத்தில் (17-ல்) காணலாம். நம்முடைய வாதத்தில் எது எது உயிரானதோ அதையெல்லாம் இவர் அநுவதித்து "ஒப்புக்கொள் வோம்" என்றும் "இல்லை செய்து பேசவில்லை" என்றும் தெய்வமேயென்று எழுதித்தீரவேண்டியதான பின்பு வாய்திறக்கவுண்டோ வழி? ஆனாலும் இருநூறு பக்கம் எழுதுகிறாரென்றால் கீழேயநுவதித்த பிள்ளை லோகம் பாஷ்யகாரருடைய ஸத்யவாக்கின் ஸத்யத்வமே பொலியும். நமது வாதங்களில் இதுவும் ஓர் உயிரான வாதமாக விவரிக்கப்பட்டுள்ளது. அதாவது, "த்ரௌபதி செய்தது ப்ரபத்தியா? அல்லது திருநாமஸங்கீர்த்தனமா? ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரபத்தி செய்தது நிஸ் ஸந்தேஹமாகத் தேறியிருக்கிறது. முமுக்ஷுப்படியில் 'ப்ரபத்தி பண்ணவில்லை, நாமஸங்கீர்த்தனந்தான் பண்ணினாள்' என்றருளிச்செய்யப்படவில்லை. ஆதலால் விரோத சங்கைக்கு இடமே கிடையாது" என்பது நம்முடைய அப்ரத்ருஷ்யமான வாதம். இவர் (பக்கம் 21-ல்) இந்த நமது பங்க்திகளை அப்படியே உதாஹரித்து, இதற்குத்தாம் ஏதோ ஸமாதானம் சொல்லுவதாக ஆரம்பித்து "த்ரௌபதியிடம் சரணாகதியை இல்லை செய்வார் யார்?" என்று முடித்திருக்கிறார். இது எங்ஙனே யிரா நின்றதென்றால் "என்னுடைய வாக்ப்ரபஞ்ச மெல்லாம் சுஷ்கவாக்ஜால மென்று பிராமாணிகர்கள் சொன்னால் இதை இல்லை செய்வார் யார்? என்று தம்முடைய திருவாக்கின் வீறுதன்னைத் தாமே தெரிவித்துக்கொள்வது போலிரா நின்ற தத்தனை.

10. இவர் நம்முடைய பங்க்திகளை யநுவதித்து 'ஒப்புக்கொள்வோம்' என்றும், 'இல்லை செய்து பேசவில்லை' என்றும், 'இல்லை செய்வார் யார்?' என்றும் எழுதி வரும் ப்ரகரணங்களில் 'ஆனாலும்' என்கிற வொரு நிரர்த்தக ப்ராரம்பம் செய்வதுண்டே; அப்படி இங்குள்ள சுஷ்கவாக்ய மென்னவென்றால், பெரியவாச்சான் பிள்ளை, லோகாசார்யன், மணவாள மாமுனிகள் முதலானோர் திருவுள்ளக் கருத்துக்களைப் பின்பற்றித் தாம் கூறுகிறபடியால் முமுக்ஷுப் படிக்கும் ஸ்ரீவசநபூஷணத்திற்கும் முரண்பாடு உண்டென்று சொல்வதற்குத் தட்டே கிடையாதென்று தலைக்கட்டுகிறார். இதைப்பற்றி இப்போது நாம் சுருக்க மாகத் தெரிவிப்பதென்ன வென்றால்; பெரியவாச்சான் பிள்ளை அப்படி ஸாதித் திருக்கிறார், இப்படி ஸாதித்திருக்கிறார் என்று பொய்யாகவே சிலவற்றை யெழுதி இவர் பாமரர்களை வஞ்சிப்பது வழக்கமென்பதை இந்த வெற்றிநூலிலேயே முதல் மலரில் முதல் விஷயமாக நிரூபித்திருக்கிறோம். (அதாவது) *கண்ணனூர் கண்ண புரப்பாசுர வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை இளைய பெருமாளை அஸத்யவாதியாக வருளிச் செய்திருக்கிறாரென்று இவரெழுதியது அஸத்யமென்று

நிரூபித்திருக்கிறோம். இவ்விடத்திலும் அதே அஸத்யந்தான். அஸத்யமன்றென்றால் விப்ரலம்பமென்று கொண்மின். இவ்விரண்டுதவிர மூன்றாவதில்லை.

11. இதை நன்கு உபபாதிக்கிறோம். இவர் (1942ஆம் ஆண்டு முதலாக) பதினேழாண்டுகளாக விரோதம் விரோதம் என்று சொல்லிவருவதும் எழுதிவருவதும் பிள்ளை லோகாசார்யருடைய திவ்யக்ரந்தங்களிலேயல்லது மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்தியிலன்று; பெரியவாச்சான் பிள்ளை திவ்ய ஸூக்தியிலுமன்று. லோகாசார்ய ஸூக்திகளில் முரண்பாடு இருந்தால் அதை எடுத்துக் காட்டவும் பரிஹரிக்கவும் கடமைப்பட்டவர் மணவாள மாமுனிகள் ஒருவரே. அவர் இதில் தலையிடவே யில்லை யென்றும் அதனால் விரோதமென்று வாய்திறக்கவே கூடாதென்றும் முன்னமேநாம் பரக்க நிரூபித்திருக்கிறோம். அதில் வாய்திறக்கவழியில்லையிவர்க்கு. பிள்ளை லோகாசார்யருக்கு முற்பட்டவரான பெரியவாச்சான் பிள்ளையை இந்த விவாதத்தில் ஆகர்ஷிக்க அவகாசமே கிடையாது. *சங்க சக்ரகதாபாணே* என்கிற ச்லோகத்தின் வியாக்கியானத்தில் அவர் அருளிச் செய்திருப்பது ப்ரக்ருத விவாதத்திற்கு ஈஷத்தும் உபகாரகமாகாது. ஏனென்னில்; உற்றுக் கேண்மின்; *ஸ ஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* என்கிற ஸ்ரீராமாயண ச்லோகம் ஸுப்ரஸித்தம்; இராவணனை வதம் செய்யவேணு மென்று கோரி சரணாகதி செய்த தேவர்களுக்காக ஸ்ரீ மஹாவிஷ்ணு இராமனாயவதரித்ததாக இதில் சொல்லப்பட்டிருக்கிறது. இராவணனுடைய நலிவுகளை ஒரு நொடிப் பொழுதும் பொறுத்திருக்கமாட்டாத தேவர்கள் அவனை வதம் செய்யவேணுமென்று வேண்டினால் அந்த வேண்டுகோளை அடுத்த க்ஷணத்திலேயே நிறைவேற்ற வல்ல ஆற்றல் ஸ்ரீமஹா விஷ்ணுவுக்கு இல்லையா? அமரர்கள் பிரார்த்தித்தது எப்போது? அந்த ப்ரார்த்தனையைப் பகவான் நிறைவேற்றிய தெப்போது? என்று பார்த்தால், பசியினால் துடித்துச் சோறிடுமாறு ப்ரபவ வருஷத்தில் சரணாகதி செய்தவனுக்கு அக்ஷய வருடத்தில் அன்னமளித்த கதையாகவன்றோ இருக்கிறது. இங்ஙனேயிருந்தும் தேவதைகளின் சரணாகதி பலித்துவிட்டதாகவே சொல்லி வருகிறோம். பரதாழ்வானுடைய ப்ரபத்தியும் பதினாந்தா மாண்டில் பலித்து விட்டதாகவே பணித்துள்ளார்கள். த்ரௌபதிக்கு உடனே பரிஹரிக்கவேண்டிய ஆபத்தும் க்ரமேண பரிஹரிக்கப்பட வேண்டிய கஷ்டமும் உலகமறிந்தது. கண்ணபிரானால் இரண்டும் யதாகாலம் பரிஹரிக்கப்பட்டு விட்டன வென்பதும் ஸர்வ நிர்விவாதம். இப்படி யிருக்க த்ரௌபதியின் சரணாகதி பலிக்கவில்லை யென்று ஒருவர் பறை சாற்றிக் கொண்டிருந்தால், இளைய பெருமாள் அஸத்யவாதி யென்கிற வாதத்தோடு இதுவும் ஒரு வாதமாக உலாவிக் கொண்டிருக்கட்டுமே.

## இவருடைய நிரர்த்தகவிசாரம்.

12. ப்ரபத்தி ப்ரகரணத்தில் "த்ரௌபதிக்கு பலம் வஸ்த்ரம்" என்கிற ஸ்ரீஸூக்தி விளங்குவது அபலபிக்க வொண்ணாதது; இங்கு த்ரௌபதி உத்தேசித்த பலன் என்று அர்த்தமா? த்ரௌபதி பெற்ற பலன் என்று அர்த்தமா? என்று விகல்பித்துக்கொண்டு தலை வேதனையான விசாரம்—காடு பாய்ந்த விசாரம் செய்யப்பட்டிருக்கின்றது. "த்ரௌபதிக்கு பலம் ஸ்வகீய ஸகலக்லேச நிவ்ருத்தி" என்று மூலமிருந்தால் அப்போது இந்த விசாரம் செய்யப் பாங்குண்டு. த்ரௌபதிக்கு அப்போது உண்மையில் எப்பேறு கிடைத்திருக்கிறதோ அப்பேறு தானே அங்குப் பலனாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீவசந பூஷணத்தில் திருநாமத்தைப் பற்றின ப்ரஸ்தாவமே யில்லாத விடத்தில் இது சொல்லப்பட்டிருக்க இதற்கு ஓர் அஸித்தி கல்பிக்கப் பார்ப்பது ஸ்ரீவசநபூஷணத்தை தூஷிப்பதாகுமே யொழிய வேறாகுமோ? முமுக்ஷுப்படியில் த்ரௌபதியின் ப்ரஸ்தாவம் ஒரே யிடத்தில்;

ஸ்ரீவசநபூஷணத்தில் இந்து ஆறு இடங்களில். ஆறு இடங்களும் த்ரௌபதிக்கு ப்ரபத்தியினால்தான் பேறு என்பதை ஸம்சய விபர்யயமற நிலைநாட்டி யிருப்பன.

## த்ரௌபதீ ப்ரஸ்தாவமுள்ள ஆறு இடங்கள்.

13. ("த்ரௌபதீ பரிபவங்கண்டிருந்தது........த்ரௌபதியுடைய மங்கள ஸூத்ரத்துக்காக.......இவளுக்காக" என்னுமிடங்கள் ப்ரக்ருதோபயோகிகளல்லாமையாலே அவற்றை விட்டிடுவோம். முக்கியமான ஆறிடங்களாவன ;—(1) அதிகாரி நியமா பாவத்தை உபபாதிக்கும் சூர்ணை. (2) பல நியமா பாவத்தை உபபாதிக்கும் சூர்ணை. (3) ப்ரகார நியமாபாவத்தை உபபாதிக்கும் சூர்ணை. [இம்மூன்றும் உபாய வைபவப்ரகரணத்திலுள்ளவை. மேலே அதிகாரி சோதந ப்ரகரணத்திலுள்ளவை மூன்று.] (4) உபாயத்துக்குப் பிராட்டியையும் த்ரௌபதியையும்........போலே யிருக்கவேண்டும்." (5) "பிராட்டிக்கும் த்ரௌபதிக்கும் வாசி சக்தியும் அசக்தியும்." (6) "பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள், த்ரௌபதி லஜ்ஜையை விட்டாள்." —ஆக 6 இடங்கள். இவற்றுள் விசாரத்தில் க்ஷுண்ணமான இரண்டிடங்கள் நிற்க, மற்ற நான்கிடங்களும் 'த்ரௌபதி ப்ரபத்தியினால் தான் பேறு பெற்றவள்' என்பதை ஊர்ஜிதப் படுத்துவன.

14. இதனை நன்கு உபபாதிக்கிறோம். "த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று" என்கிற சூர்ணையானது நம்முடைய உபபாதனத்தை யபேக்ஷிப்பதே யன்று. அவள் ப்ரபத்தியினால் பேறு பெறாதவளாயிருந்தால் ப்ரகார நியமத்தைத் தவறி அசுத்தையாய் ப்ரபத்தி பண்ணினபடியால்தான் பேறிழந்தாள் என்று சொல்ல நேருமே. ஆகையால் இந்த சூர்ணை இந்த ப்ரகரணத்திற்கு நிரர்த்தகமாயும் விபரீதார்த்தகமாயும் நிற்கும். பெருமாள் ப்ரகார நியமத்தோடு ப்ரபத்தி பண்ணியிருந்தும் அவருக்கு அது பலிக்கவில்லையே யென்கிற ப்ரதிவாதம் இங்கு ஸர்வாத்மநா சேராது. "விஷய நியமமே யுள்ளது" என்னப்பட்டவொரு நியமத்தைக் கடந்து கேவலம் விபீஷணோக்தி பக்ஷபாதத்தாலே பெருமாள் செய்த ஸமுத்ரராஜ ப்ரபத்தியைக்கொண்டு ஒரு சோத்யமும் செய்வதற்கில்லை. இங்கு ப்ரபத்தி பண்ணினவர்களின் கோஷ்டியில் பெருமாளையும் சேர்த்துப் படித்தது "ப்ரபத்தி பண்ணும் போதைக்கு *அஸமர்த்தம் விஜாநாதி யென்பாராகாது" என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்தியின் படிக்குப் பெருமாள் அநதிகாரி யென்னுமிடத்தை மூதலிக்கவே யன்றோ. இங்ஙனே யல்லது வேறு விதமாக வாய் திறக்கவு மொண்ணாது. மனம் போனபடி வேறுவகையாகச் சொல்லுவதானால் 'இந்த ப்ரகரணத்தில் தர்மபுத்ராதிகளோ டொக்கப் பெருமாளையும் சேர்த்துப் பேசினது தவறு' என்று தான் இவர் முடிவுசெய்ய வேண்டிற்றாகும். 'விஷய நியமமேயுள்ளது' என்று நிர்த்தாரணம் செய்தருளின பிள்ளை லோகாசாரியர் அந்த நியமத்திற்குக் கட்டுப்படாமல் ப்ரபத்தி செய்த பெருமாளை இந்த ச்ரேணியில் எங்ஙனே சேர்த்துப் பேசலாம்?' என்கிற பூர்வபக்ஷம் வலிதாக நிற்கும். அது தனிப்பட்ட விஷயமென்று விடுக்க. ஆகவே இங்குப் பெருமாளைப் பற்றிக்கொண்டு எவ்விதமான குசோத்யமும் செய்யலாகாதென்பது புநருக்தம். அவரொருவரை விட்டு இங்கு உபாத்தர்களான மற்றவர்களைக் கொண்டால் பேறு பெறாதவராக ஒருவரும் தேறார்.

## த்ரௌபதிக்கு ப்ரபத்தியினால்தான் பேறு.

15. மேலே அதிகாரி சோதந ப்ரகரணத்தில் மூன்று விசையுள்ள த்ரௌபதீ ப்ரஸ்தாவம் ஸமஞ்ஜஸமாக வேணுமானால் அவள் பேறு பெற்றவளென்று இசைந்தே தீரவேணும். ஒரு மருத்துவனுடைய ப்ரசஸ்தியைப் பேசி வருங்கால் அவனை யணுகினவர்களின் நாமாவளி படிக்கப்படுமே யானால் அந்த வ்யக்திகள் யாவரும் அவனைப் பணிந்து நோய் தீரப் பெற்றவர்களாயிருக்கவேண்டுமே யல்லது,

பணிந்து பாழாய்ப் போனவர்களை ப்ரஸ்தாவிக்கவும் தகாதன்றோ. "உபாயத்துக்கு த்ரௌபதியைப் போலே யிருக்கவேணும்" என்றருளிச் செய்த போதே த்ரௌபதி ப்ரபத்த்யதிகார பூர்த்தியுடையவள் என்பது ஸ்தாபிதமாயிற்றே. இங்கு மூன்று சூர்ணைகளின் விசத வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகளை ஸேவித்தால் எல்லாக் கலக்கங்களும் தொலையுமென்று தெரிவித்து நிற்கிறோம். இவரது நூலில் (110 முதலான பக்கங்களில்) "உபாயாதிகாரி இருக்க வேண்டும் விஷயத்தை யருளிச் செய்யுமிடத்து 'பிராட்டி சக்தியை விட்டாள், த்ரௌபதி லஜ்ஜையை விட்டாள்' என்றருளிச் செய்திருக்கிறார்; இவ்வாக்கியங்களின் கருத்து .... ...." என்று தொடங்கி யெழுதியிருக்குமவை அத்யந்தம் அநபேக்ஷித விஸ்தரம். பிராட்டியின் சக்தியையும் த்ரௌபதியின் அசக்தியையும் பல பக்கங்களால் விவரித்து ஏடுகளை வளர்த்தி யிருக்கிறாரென்பது உண்மை. ஸ்ரீவசநபூஷண வியாக்கியான ஸூக்திகளை அரும்பதவுரைகளோடுங்கூட எழுதிக்கொண்டே போனால் 200 பக்கமென்ன? 400 பக்கமுமாகலாம், 4000 பக்கமு மாகலாம். எங்கு விஷயமோ அங்கு இவர் வாய்திறப்பதில்லை. இதற்கு இரண்டு காரணங்கள்; இவர்க்கு அநுகூலமான விஷயம் சிறிதுமில்லாமை யொன்று. விஷயத்தை விட்டுக் காடுபாய்ந்தே பேசிப் போகிற அப்யாஸம் மற்றொன்று. இதுதான் பிரபலகாரணம். ஒரு பண்டிதர் ஸுந்தரகாண்ட ப்ரவசனம் செய்யத் தொடங்கினர். அவர் வியாகரணம் மட்டும் அரை குறையாக வாசித்தவர்; ராமாயணத்தைக் கண்டும் கேட்டு மறியாதவர். ஆனாலும் தத்ப்ரவசநம் செய்ய ஆசைப்பட்டு விட்டார். *ததோ ராவண நீதாயா:* என்று ச்லோகத்தை வாசித்தார். [தத:] தச்சப்தத்தின்மேல் தஸில் ப்ரத்யயம்; தச்சப்தம் ஸர்வநாம சப்தத்தில் சேர்ந்தது; தத்ஸ்வரூபம் எப்படிப்பட்டதென்றால்........என்றாரம்பித்துப் பல ஸூத்ரங்களை யடுக்குகிறார். (தத:) என்பதற்கு மூன்று நாளுபந்யாஸம் என்று ப்ரஸித்தி வந்து விட்டது. அதே கதைதான்.

## வான்மீகி வாக்குக்கும் கம்பர் வாக்குக்கும் கனமான விரோதம்.

16. அசோக வனத்தில் பிராட்டியைக் கண்டு மீண்ட திருவடி பெருமாள் பக்கலில் வந்து *த்ருஷ்டா ஸீதா* என்று பிராட்டியைத் தாம் கண்டதாக விண்ணப்பம் செய்ததாய் வான்மீகி முனிவர் கூறியுள்ளார்; இதே ஸந்தர்ப்பத்தைக் கம்பர் கூறுகையில் "விற்பெருந்தடந்தோள்வீர! வீங்கு நீரிலங்கை வெற்பில், நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன்" என்று திருவடி விண்ணப்பமாகப் பாசுரமிட்டார். திருவடி பிராட்டியைக் கண்டு வந்ததாக வான்மீகி கூறினர்; பிராட்டி காணப்படவில்லையென்றதாகக் கம்பர் கூறினர்; இவ்விரு நூல்களும் பரஸ்பரம் விருத்தம் என்பது வெள்ளிடைமலை; ஆகவே இங்கு விரோத பரிஹாரம் அவசியமென்பது கூறாமலே விளங்குமன்றோ? என்று இவருடைய ஸஹோதரரொருவர் எழுதியிருக்கின்றாராம். இங்ஙனே விரோதத்தை வெள்ளிடை மலையாக வெடுத்துக்காட்டினவவர் பரிஹாரம் எங்ஙனே செய்திருக்கின்றாரென்னில்; 'த்ருஷ்டா ஸீதா' என்று வான்மீகி சொன்னது பிசகு; இராமனைக் காட்டிலும் வீரனும் சூரனுமான ஹநுமான் பிராட்டியைக் கண்டது உண்மையாயிருந்தால் அவளைத் தன் வாலில் சுற்றிக் கொணர்ந்து பெருமாளிடம் சேர்த்திருக்க மாட்டானா? வெகு ப்ரயாஸப்பட்டு த்வீபாந்தரம் சென்ற குரக்கரசன் 'சீதையைக் கண்டேனையா!' என்று வெறுங்கையோடு திரும்பிவருவானா? அசட்டுக் குரங்கன்றோ அப்படி திரும்பிவரும். மஹாபிரபுவொருவன் தன் வேலைக்காரனையழைத்து "நான் விரைவில் வெளியூர் போகவேணும்; சடக்கென வண்டி பார்த்துக்கொண்டு வா' என்று கட்டளையிட்டால் அவன் ஒரு காதவழி நடந்துபோய் வண்டியைப் பார்த்துவிட்டு, அந்தவண்டியை அழைத்துவராமல் வெறுமனே திரும்பிவந்து 'வண்டியைக் கண்டேனையா' என்றா சொல்லுவான்? அஸமர்த்தனான தூதுவனன்றோ அங்ஙனம்

சொல்லுவான். அனுமானென்பவர் லேசானவரா? * கார்யே கர்மணி நிர்திஷ்டே யோ பஹூந்யபி ஸாதயேத், பூர்வகார்யாவிரோதேந ஸ கார்யம் கர்த்துமர்ஹதி. * என்றவரல்லவா அனுமான். ஒரு காரியம் சொன்னால் ஒன்பது காரியங்களை ஸாதித்து வரக்கூடிய ஆற்றல் பெற்ற அவர் ஒரு காரியத்தையும் ஸாதித்து வரவில்லையென்றும் வெறுங்கையோடே வந்து நின்றாரென்றும் எழுதி வைப்பது அவ்வனுமானுடைய புகழுக்குக் கொத்தையல்லவா? ஆகவே கண்டு வந்தேனென்றதாக வான்மீகி கூறினது தவறு; கண்டேனல்லேனென்றதாகக் கம்பர் கூறியதுதான் பொருத்தமானது. கொண்டு வராமையும் கண்டுகொள்ளாமையும் பரியாயமென்பது வெள்ளிடைமலை. இப்படியல்லது வேறுவிதமாக விரோதபரிஹாரம் செய்யவேமுடியாது. இங்கு விரோதம் ஸ்பஷ்டமாகக் கண்டோமல்லவா? கண்டோம். விரோதபரிஹாரம் செய்யவேண்டியது அவசியமல்லவா? அவசியம். வேறு எப்படி செய்ய முடியுமென்பதை நடுநிலையிலுள்ளவர்கள் கூறவேண்டுமல்லவா? கூறவேண்டும்.

17. இவை இவருடைய ஸஹோதரரின் திவ்யபங்க்திகள். இதற்குமேல் ஒரு மஹான் எழுதினதாவது; இங்கு விரோத ப்ரஸக்தியே கிடையாது கிடீர்; எடுத்த கம்பர் செய்யுளின் பின்னடிகளைப் பார்த்தீரா? *இற்பிறப் பென்பதொன்றும் இரும்பொறை யென்பதொன்றும், கற்பெனப் படுவதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்* என்பன பின்னடிகள். நல்ல குடிப்பிறப்பும் பொறுமையும் கற்புமே வடிவெடுத்தவள் என்னும்படியான ஸீதையைக் கண்டு வந்தேன் என்பது காணும் இங்கு விவக்ஷிதம். இந்த விவக்ஷைக்குச் சேர 'நங்கையைக் கண்டேன் நல்லேன்' என்று பதம் பிரித்துக்கொள்ளவும் பாங்குண்டு—என்று. இங்ஙனே உண்மையைத் தெரிவித்துங்கூட அவர் தெளியகில்லாதவராய் (அல்லது) பிடித்த பிடி விடமாட்டாதவராய் "இது எனக்கும் தெரியுங்காணும்; நான் போகிறவழி இன்னதென்றே உமக்குத் தெரியவில்லையே; திருவடி பிராட்டியைக் கண்டு வந்தேனென்று சொல்லுவது அஸங்கதம் என்றல்லவா நான் அழகாக நிரூபணம் செய்திருக்கிறேன். மறுபடியும் வெகு அழகாக நிரூபிக்கிறேன், கேட்கிறீரா? என்று கண்கள் சிவந்து பேசப் புகுந்தாராம். ஸ கிம் கநிஷ்ட: கிமு ஜ்யேஷ்ட:?

## பீதாம்பர பண்டித ப்ரஸ்தாவம்

18. சென்றவாண்டில் திரோஹிதரான வொரு பெரிய பண்டிதரோடு பல வாண்டுகட்கு முன்பு நமக்கு வாத விவாதம் நேர்ந்தபோது அவர்க்கு பீதாம்பர பண்டிதரென்கிற ப்ரக்க்யாதி அநுவதிக்கப்பட்டிருந்தது. அதைச் சிறிது நினைப்பூட்ட ப்ராப்தமாகிறதிங்கு. *பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந் மந்மதமந்மத: * என்கிற ச்லோகத்தை விரிவாகவும் ரஸகனமாகவும் உபந்யஸிக்க ஆசைகொண்டிருப்பதாகக் காட்டின அவர் "பீதாம்பரதர:" என்னுஞ் சொல்லின் விசேஷார்த்தங்களைப்பற்றி மட்டும் 20, 25 நாள் உபந்யஸிக்கப் போகிறேன்" என்று ப்ரதிஜ்ஞை செய்து, 'கண்ணன் அணிந்து கொண்ட பீதாம்பரத்தை யொத்த பீதக வாடையானது ஸாமான்யமாக ஸகல நகரங்களிலும் கிடைக்குமானாலும் அது விசேஷமாகக் கிடைப்பது காசியில் தான்' என்று காசியின் ப்ரஸ்தாவத்தைப் புகவிட்டுக் கொண்டு, ஸ்வதேசத்திலிருந்து காசிக்குப் போகிற வழியிலுள்ள ஊர்களைப்பற்றி ஏழெட்டு நாள், காசியிலுள்ள கடைவீதிகளைப் பற்றி ஏழெட்டு நாள், ஒவ்வொரு கடையிலும் விற்கப்படுகிற சரக்குகளைப்பற்றி ஏழெட்டுநாள்...... இப்படியாக உபந்யாஸாம்ருத ப்ரவாஹம் பெருகிச் செல்லுகின்றதென்று நாடு நகரமெல்லாம் கொண்டாடும்படியாகப் பல மாதங்கள் பேசினாராம். அதனால் அவர்க்குப் பீதாம்பர பண்டிதரென்று ப்ரஸித்தியாம். அத்தகைய ப்ரஸித்தி தமக்கும் வாய்க்கவேணுமென்றே இவர் இருநூறு பக்கங்களுக்குமேல் புத்தகமெழுதிவிட்டார்.

## பெருமாளையங்கா ருபந்யாஸம்.

19. இதுவன்றியும் பெருமாளையங்காருபந்யாஸம் என்று ஒரு ப்ரஸித்தியுண்டு; ஒருவன் காவியங்கள் மட்டும் வாசித்திருந்தால் காவ்ய பாடம் சொல்ல முடியுமே யொழிய நாடகங்களையோ அலங்கார நூல்களையோ பாடம் சொல்ல முடியாது. நாடகாலங்காரங்களையும் வாசித்து விட்டானென்று வைத்துக்கொள்வோம்; அப்போதும் காதம்பரீ வாஸவதத்தா தசகுமார சரிதம் வ்ருத்தரத்நாகரம் இத்யாதிகளைப் பாடஞ் சொல்ல முடியவே முடியாது. அவற்றையும் வாசித்து விட்டானென்று வைத்துக்கொள்வோம்; அப்போதும் சித்ரமீமாம்ஸை, ரஸகங்காதரம், ஸாஹித்யரத்நாகரம் இத்யாதிகளைப் பாடஞ் சொல்ல முடியவே முடியாது, அவற்றையும் வாசித்து விட்டானென்று வைத்துக்கொள்வோம்; அப்போதும் அரித்மெடிக், ஸயன்ஸ், ஜாகர்பி, பிலாஸபி, மேதமேடிக் இவைகளைத் தொட்டுப் பார்க்கவே முடியாது. என்றிப்படியே ஓயாமல் பேசிப் போவராம் அவர்.

## பாவநாசாருபந்யாஸம்.

20. பாவநாசாருபந்யாஸமென்றும் ஒன்றுண்டு; அதாவது, ஒருவன் யஜுர் வேதத்தை யோதினால் அந்த வொரு வேதத்தை அவன் சொல்லிக்கொண்டிருக்க முடியுமேயொழிய ரிக்வேதத்திலோ ஸாமவேதத்திலோ வாய்திறக்கவே முடியாது. மாட்டு வண்டிகளோ மோடார் வண்டிகளோ தரையில் தான் செல்லும், தண்டுவாளத்தில் செல்லாது. தூமசகடம் தண்டுவாளத்தில் செல்லுமே யொழியத் தரையிலோ நீரிலோ செல்லாது. கப்பல் கடலில் செல்லுமே யொழிய ஆகாசத்தில் செல்லாது, நிலத்தில் செல்லாது, தண்டுவாளத்தில் செல்லாது. 4ம் 4ம் கூடினால் 8 ஆகுமே யொழிய 7 ஆகாது, 9 ஆகாது. 9 ஆகவேணுமானால் 4ம் 5ம் என்றோ, 6ம் 3ம் என்றோ, 7ம் 2ம் என்றோ சொல்லித் தீரவேணுமே யொழிய 4ம் 4ம் என்னக் கூடாது. 8ல் 4 போகுமேயொழிய 4ல் 8 போகாது. இங்ஙனே பலவும் மூச்சு விடாமல் சொல்லிக்கொண்டே போவராம் பாவநாசார்.

## இவருடைய நூல் சுஷ்கவாக்ஜால நிதியென்று முடிப்பது.

21. மேலே காட்டியவற்றுக்கு சுஷ்கவாக் ஜாலமென்று பெயர். இவரது நூலின் சைலியும் இதுவே யென்பது ஸத்யம். இப்படி நூற்றுக் கணக்கான கதைகளை சிங்கப்பெருமாள்ஸ்வாமி, பட்டப்பாஸ்வாமி போல்வார் ஸாதிக்கக்கேட்டதுண்டு. அவற்றையெல்லாம் ஏககாலத்திலே நினைப்பூட்ட வல்லது இவருடைய திவ்யநூல்.

## இவருடைய நூலில் ஆர்ஜவமில்லாமையை விளக்குதல்.

22. ஆரியர்காள்! இங்ஙனே அடியேன் வம்பாக ப்ரதிஜ்ஞை செய்துவிட்டு நிற்பவனல்லேன். இவரது நூலில் ஒவ்வொரு விஷயத்தையுமெடுத்துக்கொண்டு, ப்ரக்ருதோபயோகியான விஷயம் எள்ளளவுங் கிடையாதென்பதை விரிவுக்கு அஞ்சாது நிரூபித்துக்கொண்டேவருகிறேன். த்ரௌபதீ விஷயத்தில் முதன் முதலாக இவரெழுதின தென்ன? அதன்மேல் நாமெழுதினதென்ன? இப்போது முடிவாக இவர் எழுதுவதென்ன? என்று பரிசீலிக்கப் புகவேணும். இதை இவர் ஆர்ஜவத்தோடு தெரிவித்திருக்கவில்லை. நாம் இப்போது முந்துற முன்னம் ஸாரமாகவும் சுருக்கமாகவும் தெரிவிக்கிறோம். ‘இவர் ஆர்ஜவத்தோடு தெரிவித்திருக்கவில்லை’ என்றதை முன்னம் நாம் மூதலிக்கிறோம். நமது நூலில் “மேகம் பெய்ததனால் நெல் விளைந்தது’ என்று ஒருவன் சொல்லுகிறான்; ‘தண்ணீர் பாய்ந்தபடியாலே நெல் விளைந்தது’ என்று மற்றொருவன் பேசுகிறான்; இந்த வார்த்தைகளில் பரஸ்பர்விரோத சங்கைக்கு அவகாசமுண்டோ? இது போலவே ப்ரபத்தியின் பயனாக வஸ்த்ரவ்ருத்தியாயிற்று என்று சொல்லுவதும், திருநாமம் சொன்னதின் பயனாக

அதுவாயிற்று என்று சொல்லுவதும் வ்யாஹதங்களல்ல." என்று எழுதியிருந்தோம். இதற்கு விடையாக இவர் ஏதேனும் எழுதிற்றுண்டோ? ஏனில்லை? அழகாக உண்டு என்பர். அவ்வழகைக் கண்ணுடையார் காணவேணும்; காதுடையார் கேட்கவேணும்.

## ஸுதர்சந சதகரீதிப்ரதர்சநம்.

23. இதேரீதியில் நூற்றுக்கணக்கான விஷயங்கள் சொல்லவல்லோம். சில கேண்மின். ஸுதர்சந சதகமென்பது வெகு அற்புதமான நூல்; நூறு ச்லோகங்களும் ஸுதர்சநாழ்வானுடைய பெருமைகளையே பேசுவன. ஆனால் கவி தம்முடைய சாதுர்ய விசேஷத்தாலே ஜ்வாலாவர்ணநம், அரவர்ணநம், அக்ஷவர்ணநம், நாபிவர்ணநம், நேமிவர்ணநம், புருஷவர்ணநம் எனப் பாகுபாடுகள் வைத்து, சில பெருமைகளை ஜ்வாலையிலேற்றியும், சில வைபவங்களை அரங்களிலேற்றியும், சில ப்ரபாவங்களை அக்ஷத்திலேற்றியும், சில மஹிமைகளை நாபியிலேற்றியும், சில சிறப்புகளை நேமியிலேற்றியும், சில உத்கர்ஷங்களை ஸுதர்சந புருஷனிடத்தில் வைத்தும் கூறியுள்ளார். இதைக் கொண்டு நூற்றுக்கணக்கான விரோதங்களைக் கிளப்பலாமிவர். திருவாழி யாழ்வான் தான் செய்த செயல்களையெல்லாம் அக்ஷமும் நாபியும் நேமியும் செய்ததாகச் சொல்லியிருக்கையாலே "இது அக்ஷம் செய்ததேயொழிய நாபி செய்ததன்று; இது நேமி செய்ததேயொழிய அரம் செய்ததன்று; இது ஸுதர்சந ஜ்வாலை செய்ததேயொழியத் திருவாழிசெய்ததன்று" என்று சொல்லிக் கொண்டே போகலாமிவர். அஸுரராக்ஷஸ விநாசநம் என்கிற ஒரே கார்யத்தைச் சில ச்லோகங்களில் ஜ்வாலை செய்ததாகவும், சில ச்லோகங்களில் நேமி செய்ததாகவும், சில ச்லோகங்களில் நாபி செய்ததாகவும், சில ச்லோகங்களில் அரம் செய்ததாகவும், சில ச்லோகங்களில் அக்ஷம் செய்ததாகவும், சில ச்லோகங்களில் ஸௌதர்சந புருஷன் செய்ததாகவும் சொல்லியிருக்கிறார். இதை நம்முடைய விரிவான வியாக்கியானங்கொண்டு நன்கு உணரலாம். இவை யெல்லாம் பரஸ்பர விருத்தங்களென்று வைத்துப் பரிஹாரம் செய்யும் வழியைத் தேட வேணுமிவர். விருத்தம் என்று முடிக்க வேணுமேயொழியப் பரிஹாரத்திற்கு ப்ரஸக்தியேது?

## கஜேந்த்ர ரக்ஷணத்தில் காட்டும் விரோதங்கள்.

24. கஜேந்திராழ்வானை எம்பெருமான் காத்தருளினதாக ஒருவர்; திருவாழி யாழ்வான் ரக்ஷித்ததாக வேறொருவர்; கஜேந்திரனுடைய ஆர்த்தநாதமே ரக்ஷித்ததாக இன்னொருவர்; சுமந்து கொடு கனவேகமாக வோடிவந்த கருளப்புள் காத்ததாக மற்றுமொருவர்; பகவானுடைய வாத்ஸல்யமே காத்ததாக வொருவர்; அன்றன்று, அவனுடைய கருணை தான் காத்தது என்பதாக வொருவர்; பகவானுடைய த்வரைதான் காத்ததென்று ஒருவர்...... இங்ஙனம் பலவாறு சொல்லியுள்ளார்கள்; சொன்ன ஒவ்வொருவரும் பரம ஆப்தர்கள். இச்சொற்களில் விரோதங்களில்லையா? இவற்றை யெடுத்துக் காட்டிப் பரிஹரிப்பரேல் உலகுக்குப் பரமோபகாரம் செய்தவராவரேயிவர். இத்தகைய உபகாரங்களன்றோ விவேகிகள் செய்யவேண்டும்.

## ராமபாண ராமசாபஸ்தவங்களில் காட்டும் விரோதங்கள்.

25. காவ்ய மாலையில் ராமபாண ஸ்தவமென்றும் ராம சாபஸ்தவமென்றும் அற்புதமான இரண்டு ஸ்தவங்கள் வெளிவந்துள்ளன. ஸ்ரீராமாயண கதைகள் பெரும்பாலும் இவற்றில் அடங்கியுள்ளன. அவ்வவதாரத்தில் ஸகல கார்யங்களையும் ராமபாணமே செய்துவிட்டதாக ஒரு ஸ்தவம்; இல்லை யில்லை, இராமபிரானது வில்லே தான் செய்ததென்று மற்றொரு ஸ்தவம். இரண்டு ஸ்தவங்களும் சேர்ந்து இராமன் செய்தது எதுவுமே கிடையாதென்று முடிவு செய்கின்றன. இவர் என்னமுடிவுசெய்கிறாரென்று பார்க்கவேணும். அடிபணிந்தும் கேட்கவேணும்.

## ஐயங்கார் பாசுரங்களில் காட்டும் விரோதங்கள்.

26. திவ்யகவி பிள்ளைப் பெருமாளையங்கார் இதிஹாஸ புராணங்களையே வேறாக்கியுள்ளார்; அந்த விநோதமும் விரோதமும் சிறிது கேண்மின். சதுர்முகனையும் உலகங்களையும் நாராயணன் படைத்ததாக ஸகல சாஸ்த்ரங்களும் அறைகின்றன; ஐயங்கார் சொல்லுவதோ, இதெல்லாம் திருநாபியின் காரியமே யொழிய நாராயணனுக்கு இது ஒன்றுமே தெரியாது என்பதாக. [* ஒரு நாலு முகத்தவனோடு உலகீன்றாயென்பர், அது உன் திருநாபி மலர்ந்ததல்லால் திருவுளத்திலுணராயால் *] இவ்வண்ணமாகவே, நரசிங்கமூர்த்தி இரணியனை நிரஸித்ததாகச் சொல்வது பொய்; அப்பிரானது நகங்களே நிரஸித்தன என்கிறார். [* மேருகிரியவுணனுடல் மிடல் கெடுத்தாயென்பர், அது உன் கூருகிரே யறிந்ததல்லால் கோவே நீ அறியாயால்.*] நாபி செய்தது நகம் செய்தது - என்றவளவோடு நின்றால் கேள்வியில்லை; இக்காரியங்களில் எம்பெருமானுக்கு ஸம்பந்த கந்தமுமில்லையென்று கண்டனமுமன்றோ செய்திருக்கிறார் பிள்ளைப்பெருமாளையங்கார்.

## த்ரௌபதியைப்பற்றி ஆழ்வார் கூற்று.

27. த்ரௌபதியைப்பற்றின வரையில் ஆழ்வார்கள் என்ன அருளிச் செய்திருக்கிறார்களென்று பார்க்கவேண்டாவா? பார்ப்போம். திருமங்கையாழ்வார் திருவல்லிக்கேணிப் பதிகத்தில் ஆறாம் பாட்டில் த்ரௌபதீ பரிபவத்தை ப்ரஸ்தாவித்து, அவள் 'எம்பெருமானே! அருள் செய்யவேணும்' என்றதாகச் சொன்னாரேயல்லது, நாம ஸங்கீர்த்தனம் செய்தாளென்றாவது, சரணாகதி செய்தாளென்றாவது சொல்லியிருக்கவில்லை. இவருடைய கல்பனைகளுக்கு மூலத்திலும் இடமில்லை, வியாக்கியானத்திலும் இடமில்லை. த்ரௌபதி இரண்டு உபாயங்களையனுட்டித்தாள் என்றோ, ப்ரபத்தி விபலமாய்விட்டது, நாமஸங்கீர்த்தனந்தான் ஸபலமாயிற்று என்றோ வஸ்துஸ்திதியிருந்தால் இதைப் பூர்வாசாரியர்களில் யாரேனுமொருவராகிலும் எழுதியிருக்கமாட்டாரா? உபேக்ஷிக்கக்கூடிய விஷயமா இது? அவள் ப்ரபத்தியினால்தான் பேறுபெற்றாளென்று நிலைநாட்டவல்ல ஸ்ரீஸூக்திகளேயன்றோ ஸ்ரீவசநபூஷணத்தில் மலிந்துள்ளன.

## த்ரௌபதியைப்பற்றி மஹாபாரதோக்தி பரிசீலனம்.

28. மிக முக்கியமாகவொரு வார்த்தை;—த்ரௌபதீவிஷயம் ஆழ்வார்கள் சரிதை போலே நம் ஆசார்யர்கள் கோஷ்டியில் மட்டும் ப்ரஸித்தமானதன்று. ஸகல ஜகத்ப்ரஸித்தம். மஹாபாரத ப்ரக்க்யாதம். த்ரௌபதி மஹத்தான ஆபத்தை யடைந்தபோது கண்ணபிரானை ஸ்மரித்தாள்; ஸ்மரித்த க்ஷணத்திலேயே ஆபத்து நீங்கப் பெற்றாள் என்பதும், ஆபத்தை நீக்கினவன் கண்ணபிரானேயென்பதும் ஸர்வ நிர்விவாதமான விஷயம். "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திக்கு வேறொரு ப்ரமாணத்தோடு விரோதமுள்ளதென்று ப்ரஸங்கிப்பதானால், "புடவை சுரக்கும்படிசெய்தது கண்ணபிரான் தானேயாயிருக்க, அவனுடைய திருநாமமே சுரந்ததாகச்சொல்லுவது எங்ஙனே பொருந்தும்?" என்றிப்படி விரோதப்ரஸஞ்ஜநம் செய்ய வேண்டுமேயொழிய வேறுவிதமாகச் செய்ய ஔசித்யமே கிடையாது. "வாச்யப்ரபாவம் போலன்று வாசகப்ரபாவம்; அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டிநின்றுதவும்" என்கிற முமுக்ஷுப்படி சூர்ணையானது 'புடவை சுரந்தவன் எம்பெருமானல்லன், அவனது திருநாமந்தான்' என்று தெரிவிக்கிறதேயொழிய 'ப்ரபத்தியன்று, திருநாமந்தான்' என்று தெரிவிக்கவில்லை. ஆதலால் விரோத சங்கை பண்ணவேண்டிய வழியே வேறு. வடமொழியில் தோன்றிய விசாரநூல் இந்த

வழியில்தான் சென்றது. 'புடவை சுரந்தவன் எம்பெருமானல்லன்' என்று அந்த வடநூல் எழுதிவைத்திலது. ப்ரத்யுத, எம்பெருமான்தான் என்று ஸ்தாபனமும் செய்துளது. மந்த்ரத்திற்குப் பெருமை சொல்லவேண்டியதற்காக இங்ஙனே சொன்னபடி என்று ஸமஞ்ஜஸமான ஸமாதானமே சொல்லி முடித்திருக்கிறது. அவ்விடத்துப் பங்க்திகளை இவரே எடுத்து அடுக்கியுள்ளார். ஸம்ஸ்க்ருத பங்க்திகளாகையாலே அவை தமக்கு அநுகூலமா ப்ரதிகூலமா என்பதை ஆராயகில்லாமல் மேல்நோக்கில் தமக்கு அநுகூலம்போல் பிரமித்து உதாஹரித்தாரத்தனை.

## நூல்நிலைமை நுவலுதல்

29. வியாஸ மெழுதவேணு மென்கிற ஆசைக்குமேல் நூலெழுதவேணு மென்னுமாசையும் இவர்க்கு உண்டாகியிருப்பதால் ஸௌஜந்யத்தாலும் ஹிதபுத்தியாலும் பலபல தெரிவிக்கலாகிறது. ஸம்ப்ரதாய விஷயத்தில் நூலோ வியாஸமோ எழுதுமவர்கள் ஸம்ப்ரதாய நடையை யன்றோ கைப்பற்றவேணும் திருக்குருகைப் பிரான் பிள்ளான் முதலாக மணவாளமா முனிகளீறாக நம் ஆசார்யர்கள் தேனும் பாலும் நெய்யும் கன்னலு மமுதுமாக அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகளிலே நித்ய பரிசயம் பண்ணுமவர்களுக்கு அந்த நடை ஒழிக்க வொழியாததாய் அவசமாகவே அநுகரிக்க ப்ராப்தமாயிருக்க, இந்தத் தீவில் நடையாடாததொரு பாஷை நடை இவர்க்கென்று எங்ஙனே வந்ததென்று வியக்கும்படி யாயன்றோ வுள்ளது. மற்றையாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகள் கிடக்க; *த்ராக்ஷாமதிக்ஷிபதி நிந்ததி மாகரந்த தாராம் ஸுதாரஸஜரீம் அதரீகரோதி * என்று அஸ்மத் குல கூடஸ்தர் ஈடுபட்டுப் புகழ நின்ற மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளிலே போது போக்கும் பாக்கியம் பெற்ற குலத்திலே பிறந்தார்க்கு இப்படியும் ஒரு வாசகவைகரி படிந்துள்ள தென்றால் அந்தோ! என் சொல்லுவது. நம்மாழ்வார் திருவிருத்தத்தில், * நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூவுண்டு களித்துழலும் வண்டுகளை நோக்கி *வண்டுகளோ! வம்மின்* என விளித்து *வைகுந்தமன்னாள் குழல்வாய் விரைபோல் விண்டு கள்வாரும் மலருளவோ நும்வியலிடத்தே * என்று கேள்வி கேட்டிருக்கின்றார். நாயகியின் நலத்தை நாயகன் கொண்டாடிக் கூறும் பாசுரமாக இது அமைந்துளது. ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராண பாஞ்சராத்ர சாஸ்த்ரங்களிலே போது போக்கித் திரியும் மாஞானிகளை ஸர்வேச்வரன் விளித்து, இவ்வாழ்வாருடைய வகுளாமோத வாஸிதமான திருவாக்குப்போல் கடல்சூழ்ந்த இந்நிலவுலகில் எங்கேனும் கண்டதுண்டோ வென்று பாராட்டிக் கூறுவதாக இப்பாட்டுக்கு உள்ளுறை பொருள் கூறுகின்றார்கள். இவ்வண்ணமாகவே 'இவருடைய வாசக நடை போன்ற நடை கடல்சூழ்ந்த மண்ணுலகில் இதுகாறும் எங்கேனும் கண்டதுண்டோ?' என்று கேளாதாரில்லை.

30. பூருவாசாரியர்களின் திருவாக்கு நடையில் வெறுப்புண்டானாலும் பிற்காலத்தவர்கள் எத்தனையோ பண்டிதர்கள். மஹாமஹோபாத்யாய. சாமிநாதையரவர்கள், வைத்தமாநிதி ஸ்ரீ சடகோப ராமாநுஜாசார்ய ஸ்வாமி, கோபால க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி முதலானோர் எவ்வளவு நூல்கள் எழுதியிருக்கிறார்கள்! அவற்றின் நடையாவது ஏகதேசமேனும் காண்பதுண்டோ? இவருடைய புத்தகத்தில் தீடீரென்று எந்த இடத்தை யெடுத்து வாசித்துப் பார்த்தாலும் "காண்போம்,—கண்டோமல்லவா?—வெள்ளிடைமலை" என்று இத்தகைய சொற்களே யன்றி வேறுண்டோ? ஆரியர்காள்! நீங்களும் பல நூல்கள் பார்த்திருப்பீர்களே; வரிதோறும் வெள்ளிடை மலைகொண்ட நூலொன்று கண்டதுண்டோ? முக்கியமாக வொன்று கேண்மின். இவர் தமது நூலில் முமுக்ஷுப்படி திவ்ய க்ரந்த நாமத்தை இருநூறிடங்களில் கையாண்டிருக்கிறார். ஒவ்வோரிடத்திலும் முமுட்சுப்படி என்றே எழுதி வருகிறார். முமுக்ஷு என்று ஓரிடத்திலும் எழுதுகின்றிலர். உடனே

ஸூத்திரமென்கிறார். தமிழில் க்ஷகாரம் கிடையாதென்று அறிந்திருக்குமிவர் ஸகாரமும் கிடையாதென்று அறிந்திருக்கவேணுமே. முமுட்சு என்றெழுதினவர் சூத்திர மென்றன்றோ எழுதியிருக்கவேண்டும். ஸூத்திரம் என்கிற சொல் நாவலம் பெரிய தீவினில் தேறாதே. சூத்திரம் என்றெழுதவேணும்; அல்லது ஸூத்ரம் என்றெழுதவேணும். "இணைந்தியல் காலை யரலக்கிகரமும்" என்ற நன்னூற் சூத்திரங்கொண்டே (த்ரம்) என்னும் வட சொல்லை (த்திரம்) என்றெழுதவேணும். ஸூ என்னு மெழுத்து இருக்குமானல் அப்போது அந்தச் சூத்திரம் புகாது.

31. (பக்கம் 39-ல்) "தாத்பர்ய தீபிகாகாரர்" என்று தொடங்கி ...... அந்தப் பக்கம் முழுவதும் நம்முடைய வாக்கியாநுவாதமேயுள்ளது. அதில் நாமும் முமுட்சு என்றே எழுதியிருப்பதுபோல் சொல்வடிவம் காட்டியுள்ளார். அங்கு நம்முடைய வாக்கியங்களின் தாத்பர்யாநுவாதமாயிருந்தாலாவது தொலையட்டு மென்றிருக் கலாம். நமது வாக்யங்களையே நேராக உதாஹரிக்குமிடத்து உள்ளதாதலால் முமுட்சு என்று நாமே எழுதியிருப்தாகக்காட்டினவிது மிகவும் அநுசிதமன்றோ. இந்த கோரம் தம் தலையோடு நில்லாமல் நம் தலையிலுமா இதை ஏறிடப்பார்க்க வேணும். ஸ்ரீவசநபூஷணம் என்று நூற்றுக்கு மேலான இடங்களில் எழுதி யுள்ளார். முமுட்சு என்று அங்கே மாற்றினவர் இங்கும் மாற்றவேண்டாமா? தமிழில் ஸ்ரீயும் கிடையாது, ஷவ்வும் கிடையாது. "செய்யுட்களில்தான் சீர்வசன பூடணமென்னவேணும்; வசனத்தில் அங்ஙனம் வேண்டா" என்பரேல் முமுட்சு வுக்குமட்டும் என்ன இலக்கணம் கண்டுவிட்டீரென்று கேட்கவேண்டி வாராதோ?

32. (யாங்ஙனம்) (கூறுவாம்) (விளக்குவாம்) இத்தகைய ஸ்ரீமத்கம்பீர வாக்குகளும் அபரிமிதம். மணவாளமாமுனிகள் இத்தகைய பிரயோகங்கள் செய்யக் கற்றிலர் போலும். (வெள்ளிடைமலை) என்று நூறு இடங்களில் எழுதுவதும், (தெளிவாம்) (நன்குபுலனும்) (நன்கு விளங்குகின்றதல்லவா) என்று சிற்சிலவிடங் களில் எழுதுவதும் இனிவேண்டாம். எங்கும் வெள்ளிடை மலையேயிருக்கட்டுமே. வெள்ளிடைமலை ஸ்வாமியென்று திருநாமம் சாத்தியிருப்பவர்களுக்கு மிகவும் கை கொடுத்ததாகுமன்றோ. (தொலைவில்) என்று பலகால் எழுதிப்போருகிறார். இது வ்ருஷலவார்த்தைகளில் கேட்டதுண்டு. "ஆசார்யர்கள் அருளிச்செய்த நூல் களில் இதற்குச்சான்றுகளைக் காட்டுவோம்" என்று ஆங்காங்கு எழுதுமிவர் ஆசார்யர்களின் நூல்களைக்கண்டதாகவும் காட்டிக்கொள்ளுகிறாரே; (தொலைவில்) என்று எங்கேனும் கண்டிருக்கிறாரோ? "தொலைவில்லி மங்கலம் என்றில்லையோ?" என்று உடனே காட்டிவிடுவர்; அதற்குமேல் வாய் திறக்க வழியேது நமக்கு?

33. "அதனைச்சிறிது விவரித்துக் கூறுவாம்" என்று பிரதிஜ்ஞை செய்து, உடனே விவரித்துக்காட்டுமழகு எங்ஙனேயிருக்கின்ற தென்பதற்குச் சில உதா ஹரணங்கள் காட்டலாமென்று தோன்றுகிறது; "ஹநுமான் ஜிதேந்த்ரியனென் பதைச் சிறிது விவரித்துக் கூறுவாம்" என்று பீடிகையிட்டு, இவர் சுக்ரீவனுக்கும் முன்னடியே வந்து பம்பைக்கரையில் பெருமாளைக் கண்டு பேசினபடியாலும், விபீஷணாழ்வானைப் பரிக்ரஹிப்பதற்கு இவரே முக்கிய காரணமாயிருந்த படியாலும், பெருமாளே நடந்து செல்லவேண்டியிருந்த கடலை இவர் ஆகாச வழியாய்க் கடந்துவிட்டபடியாலும் இவைபோல்வன மற்றும்பல ஹேதுக்களாலும் இவர் ஜிதேந்த்ரியரென்பது வெள்ளிடைமலை. இராமன் மஹாவீரனென்பதைச் சிறிது விரித்துரைப்பாம் - என்று பீடிகையிட்டு, சித்திரகூடத்திற்கு வந்த பரதாழ் வான் எவ்வளவு வேண்டியும் கண்டிப்பாகத் திரும்பிவரமுடியாதென்று மறுத்து விட்டபடியாலும், ஸீதாவியோகத்தில் சிறிதும் தளர்ச்சியடையாதிருந்தபடியாலும், வாலிபோனவழியே உன்னையும் போக்குகிறேனென்று சுக்ரீவனுக்குச் சொல்லி யனுப்பினபடியாலும் மஹாவீர சூரனென்பது கண்டோமல்லவா?......இவ்வண்ண மாகவே இவருடைய உபபாதனங்கள் காணப்படுகின்றன.

# அவசியம் அறியத்தக்கதோர் பழைய செய்தி.

34. ஐம்பத்தொன்ப தாண்டுகட்கு முந்தியதோர் செய்தியை ஆப்தர்களுக்கு நினைப்பூட்டுகிறேன். காஞ்சியில் ஸ்ரீமத் பரமஹம்ஸ, அழகியமணவாளராமாநுஜ ஜீயர் மடாதிபதியாக எழுந்தருளியிருந்து ஷஷ்டி ஜீயர் என்று ப்ரக்க்யாதராயிருந்த மஹாஸ்வாமி பூர்வாச்ரமத்தில் அடியேனுக்கு மாதாமஹர். அந்த ஸ்வாமி தேவப்பெருமாள் ஸன்னிதி சடகோபநிலய பாடசாலையில் உபாத்யாயபதவியை அலங்கரித்திருந்த காலத்தில் அவரிடம் இலக்கண விலக்கியங்கள் வாசித்துத் தேறினவர்கள் பலர். அவர்களுள் ஒருவரான புன்னை சீமாச்சார் என்ற ப்ரஸித்த பண்டிதரை இக்காலத்திலும் பலர் அறிவர். அவரிடத்தில் தமிழ் வாசித்தவர் கீர்த்தி மூர்த்தியான, வை. மு. சடகோப ராமாநுஜாசாரியர் ஸ்வாமி. இவர் விளக்கில் கொளுத்தின தீவட்டியாக விளங்கினவரென்பதை உலகமெலாமுணரும். அவர், சென்ற விகாரி வருஷத்தில் அறிவிப்பு என்னும் மகுடமிட்டு வெளியிட்டிருப்பதொரு மறுப்புநூலைப்பற்றி யுணர்த்துகின்றேனிப்போது. சென்னை யூனிவர்சிடியாரால் பரீக்ஷைகளுக்குப் பாடமாக ஏற்படுத்தப்படும் தமிழ் நூல்களுக்குப் பல வருஷகாலமாக அவரும் மற்றும் சிலரும் சேர்ந்து உரையெழுதி வெளியிட்டு வந்தார்களென்பது உலகப்பிரசித்தம். அக்காலத்தில் ஸ்ரீமத். காரப்பங்காடு கோபாலாசாரியார் என்கிறவொரு தமிழ்ப்பண்டிதரும் சிலரோடு சேர்ந்து சில உரைப் புத்தகங்களை வெளியிட்டுக் கொண்டிருந்தார். இருக்கையில், சடகோப ராமாநுஜாசாரியர் ஸ்வாமியின் பெயரைக் குறிப்பிடாமல் சிலர் என்று குறிப்பிட்டு அவருடைய நூல்கள் உண்மைப்பொருளுணர்த்த மாட்டாதவையென்று குறை கூறி ஒரு முகவுரை வெளியிட்டிருந்தார் அந்த கோபாலாசாரியர். இதைக் கண்டு சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி பொறுத்திருக்கவல்லவரா? விபரீதஞானம் முதலியவற்றுக்கு மிகவும் வைதேசிகரான அந்த ஸ்வாமி பக்கலில் வேறு ஏதேனும் குறை கூறியிருந்தால் அவர் அதைப் பொருள்படுத்தி யிருக்கமாட்டார்; உண்மைப் பொரு ளுணர்த்தாமை யென்னுங் குற்றத்தை அவர் பக்கலில் சத்துருக்களும் கூற முன்வரமாட்டார்கள். கோபாலாசாரியர் நல்ல விவேகியாயிருந்தும் ஏதோ போராத காலத்தினால் அப்படி யெழுதிவிட்டார். உடனே சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி அந்த கோபாலாசார்யருடைய உரைப்புத்தக மொன்றைப் பரிசீலனை செய்யப் புகுந்து இருபது விஷயங்களில் அவருடைய மருளை அசைக்கவு மொண்ணாதபடி யெடுத்துவிளக்கி, ஒவ்வொரு பரிசீலனையின் முடிவிலும் அமைத்திருக்கின்றவாக்கு ஆச்சரியமானது. ஆச்சரியமானதென்று வெறுமனே யெழுதி விட்டால் போதுமா? அவற்றை அப்படியே உதாஹரிக்கின்றேன்.

| | |
|---|---|
| "உண்மைப்பொரு ளுணர்த்திய திறம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய தன்மை இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய வியப்பு இது | உண்மைப்பொரு ளுணர்த்திய மாட்சி இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய புதுமை இது | உண்மைப்பொரு ளுணர்த்திய தேர்ச்சி இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய ஆற்றல் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய அழகு இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய அதிசயம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய போக்கு இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய அற்புதம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய நிலை இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய விதம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய நெறி இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய பாங்கு இது | உண்மைப்பொரு ளுணர்த்திய மாண்பு இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய விசித்திரம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய முறைமை இது |
| உண்மைப்பொரு ளுணர்த்தியவாறு இது | உண்மைப்பொரு ளுணர்த்திய சால்பு இது. |

இவ்வாறு உண்மைப்பொரு ளுணர்த்துதற்கு யாம் இனிக் கற்கவேண்டுவதே"

35. இப்படியாக இருபது விஷயங்களிலும் அலசியலசிச் செய்திருக்கிற நிருபணங்கள் அற்புதம்! அற்புதம்!! என்னத் தக்கவையே யொழிய வேறல்ல.

36. சடகோப ராமாநுஜாசாரியர்ஸ்வாமி இந்த மறுப்புரையை யெழுதி அடியேனுடைய மாதாமஹஜீயர் ஸ்வாமி ஸந்நிதியிலே வாசித்துக்காட்டக் காஞ்சீபுரிக்கு எழுந்தருளியிருந்தார். இது, சென்ற விகாரி வருஷத்துச் செய்தி. அப்போது அடியேனுக்கு வயது ஒன்பது. அந்நாளில் விஷய ஸ்வரூபங்களைச் சிறிதும் அறியப் பெற்றிலேனெனினும், ஜீயர்ஸ்வாமி கேட்டுக்கேட்டு உகந்து வியந்து அவருடைய முதுகைத் தட்டிக்கொடுத்துப் புகழ்ந்து பேசினது நேற்றைய நிகழ்ச்சிபோல் நினைவிலுள்ளது. அப்போது அடியேனுக்கு காரப்பங்காடு கோபாலாசாரியருடைய பரிசய மிருந்ததில்லை: இருக்க ப்ரஸக்தியுமில்லை. சடகோபராமாநுஜாசார்யஸ்வாமி திருநாடலங்கரித்த பிறகே [1912-ஆம் ஆண்டில்] கோபாலாசாரியருடைய பரிசய முண்டாயிற்று; வெறும் பரிசயமேயன்று; மிக நெருங்கிய நட்புமுண்டாயிற்று. அவரும் சிறந்த பண்டிதரே. ஆனாலும், ச. ரா. ஸ்வாமியின் பாண்டித்யம் தனிப் பட்டது. அவரெழுதிய மறுப்புநூல் இந்த கோபாலாசார்யரைப் பற்றியதே யென்று அடியேனுக்கு நன்கு தெரியுமாதலால் அதற்கு இவர் ஏதேனும் மறுப்பு வெளியிட்டிருக்கின்றாரோ வென்று தெரிந்து கொள்ளவேண்டி ஒருநாள் இம் மறுப்பு நூலைப்பற்றி ப்ரஸ்தாவமெடுத்து "அது யாரைப்பற்றி யெழுதியது? அதற்கு ஏதேனும் மறுப்பு வெளிவந்துள்ளதோ? தேவரீருக்குத் தெரியுமோ?" என்று லோகாபிராமமாகக் கேட்டேன். அதற்கு அவர் மிகவும் ப்ராமாணிகராக விடை தந்தார்;

"அந்த மறுப்புரைக்கு நானே இலக்கானவன். அதன்மேல் ஒருவரால் ஒன்று கூற முடியுமா? என்னுடைய அநுதாபத்தைஅப்போதே அந்த ஸ்வாமியிடம் தெரிவித்துக்கொண்டேன். உண்மையில் அந்த ஸ்வாமியிடத்தில் நான் அபசாரப் பட்டதுமில்லை; என்னோடு சேர்ந்துள்ள சிலர் அபசாரப்பட்டார்கள். அந்த ஸ்வாமி யெடுத்துக் காட்டியுள்ள குற்றங்களோ குறைகளோ, யாவும் என்னுடைய உரைப்புத்தகத்தி லுள்ளவையே. உடனிருந்தவர்கள் பதிலெழுதியே யாகவேணுமென்று ஆத்திரப்பட்டார்கள் எழுதுங்கள் என்றேன். அவ்வளவோடு ஸரி. யாருடைய நூலுக்கு யாரெழுதுவது என்கிற வ்யஸ்தையில்லையா?"

என்று உண்மையைச் சொல்லி முடித்தார் கோபாலாசாரியர். இவ்வண்ணமாகவே ப்ரக்ருத விஷயத்தில் இவரும் ஒரு காலவிசேஷத்திலே ஆப்தர்களிடத்து உண்மையை யுரைக்க நேரும். ஐயமில்லை. அந்த அக்ரஹாரம் ப்ராமாணிக ப்ரசுரமிறே

## உயிரான விஷயத்தில் இவருடைய விப்ரலம்பம்.

37. த்ரௌபதி கதறியபோது கண்ணபிரான் த்வாரகையிலிருந்து புறப்பட்டு ஹஸ்திநாபுரத்திற்கு எழுந்தருள முயன்றதாகவும், அங்கு எழுந்தருள்வது கூடாதென்று கருதிய ருக்மிணிப்பிராட்டி தன் லீலாவிசேஷங்களாலே அக்கண்ணனை தனக்கே அற்றுத் தீரும்படி யீடுபடுத்திச் சிற்றின்ப ரஸங்களில் அழுந்தச் செய்துவிட்டபடியாலே கண்ணன் நேரேயெழுந்தருளி ரக்ஷிக்கவில்லையாகவும் இவர் பலகால் எழுதியுள்ளார். இது சிறிதும் பொருந்தாத வார்த்தை யென்பதையும், சில ஹரிகதாகாலக்ஷேபகாரர்களின் கல்பனையென்பதையும் நாம் மஹாபாரதத்தையே காட்டி விவரித்திருந்தோம். அதை இவர் காணாதது போலவே யிருந்துவிட்டால் க்ஷேமம்; கண்டதாகக் காட்டி அந்த நமது பங்க்திகளையெல்லாம் உதாஹரிக்கிறார்.

"த்ரௌபதி சரணம்பற்றிய காலத்துக் கண்ணன் ஸால்வவததத்திற்காகச் சென்றிருந்தனன்; ருக்மிணிப் பிராட்டியோடு அந்த: புரத்தில் எழுந்தருளியிருந்ததாய் எழுதுவது பாரதத்திற்குச் சேராது என்று சிலரும் சிலருக்காகச் சிலரும் எழுதிக்கொண்டிருக்கின்றனர்; இங்கு உண்மையை யுணர்த்துவோம்."

என்று ஸ்ரீமத் கம்பீரமாக எழுதிவிட்டு என்ன வுண்மையை என்னவிதமாக

வுணர்த்தியிருக்கிறரென்று கண்ணுடையார் காணவேணும். "இந்நூலில் இத் தூஷணத்திற்கு ஸமாதானம் ஒருவாறு கூறியிருக்கிறோம்; அது நிற்க." என்பது ஆச்சரியமான ஸமாதானம். அதற்கு மேல்—"இங்கு வாதம் இன்னது என்பதைக் கவனித்து எழுதவேணும்" என்று தொடங்கி, கண்ணபிரான் நேரில் வந்திருக்க வேண்டியது முக்கியமென்றும், வரவில்லை யென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிற தென்றும், வாராமைக்குக் காரணம் அந்தப்புரத்தில் போகரஸத்தில் ஆழ்ந்து மெய்மறந்து கிடந்ததுதானென்றும், இதுதான் உண்மையான காரணமென்றும், இதை ஒரு ஜீயர் ஸ்வாமி கண்டறிந்து எழுதியிருப்பதால் அதை நம்பித் தாமெழுதி விட்டதாகவும் எழுதி முடித்தார். இவருடைய புத்தகத்தில் முடிவு விஷயம் இதுவே. இது எவ்வளவு ஆச்சரியமான ஸமாதாநோபபாதன மென்பதைப் பண்டிதர் களோடு பாமரர்களோடு வாசியற யாவரும் காணலாம். 'வாதம் இன்னது என் பதைக் கவனித்து எழுதவேணும்' என்கிற வார்த்தை ஆச்சரியமல்லவா?

38. ஒரு ஸ்வாமி பந்துக்களின் க்ருஹத்தில் கல்யாண விசேஷத்திற்கு வந்தி ருந்தார். இரவில் எல்லாரும் அயர்ந்து உறங்கினவாறே இவர் அந்த க்ருஹத்தின் மேல் மாடியிலேறி அங்கிருந்த இரும்பு பெட்டியை எப்படியோ திறந்து விலை யுயர்ந்த வஸ்துக்களைத் தஸ்கரம் செய்து கொண்டிருக்கிறர், இதை யறிந்த க்ருஹ ஸ்வாமி நால்வருடன் மேலே சென்று அந்த தஸ்கரரைப் பிடித்துக்கொண்டு புடைக்க நிற்கையில் அந்த தஸ்கர ஸ்வாமி ஸாதிக்கிறர் :—

"அவஸரப்பட வேண்டாம்; விஷயம் இன்னதென்று புரிந்து கொள்ளாமல் அடிப்பதும் புடைப்பதும் செய்தால் என்ன அர்த்தம். இங்கு விஷயம் இன்னது என்பதை கவனிக்க வேண்டாமா? நான் என்ன கள்ள ஜாதியா? ஆசார்ய புருஷனல்லவா? இதுவரையில் என்மேல் தஸ்கரப் பேச்சு வந்ததுண்டா? நான் ஒருகால் திருட நினைத்தாலும் என்கை திருடாதே. விஷயம் இன்னதென்று தெரிந்துகொண்டு அடியுங்கள். விஷயத்தைச் சொல்லுகிறேன், அமரிக்கையோடு கேளுங்கள். என்னுடைய மனைவி மிகவும் ஸாத்வி; அவள் சொன்னள்—'கல்யா ணத்துக்குப்போகிறீர்களே, அங்கே அவருடைய இரும்பு பெட்டியில் விசேஷ வஸ்துக்களிருப்பதாகக் கேள்வி; முடியுமானல் இயன்றவரை எடுத்துக்கொண்டு வாருங்கள்; அவற்றைச் சில காலம் நாம் அநுபவித்துவிட்டு மறுபடியும் நீங்கள் அங்கே போக நேரும்போது அந்த பெட்டியிலேயே கொண்டுபோய் வைத்து விடலாம்' என்றாள். அதனல் நான் இந்த வஸ்துக்களை யெடுக்கிறேனே யொழிய நானென்ன திருடனு? இப்பொருள்கள் எனக்கேதுக்கு? இதெல்லாம் பெண்டு களுக்கு உபயோகப்படக் கூடியவைகளே யொழிய என்போன்ற ஆண்களுக்கு உரியது ஏதேனும் ஒன்றுண்டா? நீங்களே பார்க்கலாமே. விஷயம் புரிந்து கொள்ளாமல் தடியும் தாம்புமாக வந்து அடிக்கத் தொடங்கிவிட்டால் என்ன அர்த்தம். போலீஸார் தாம் வரட்டுமே; அவர்களுக்குக் கூடவா நியாயம் தெரியாமற் போய்விடும். இதென்ன வெட்கக் கேடாயிருக்கிறதே." என்று.

இப்படி ஓயாமல் அட்டஹாஸம் செய்கிறர். மேல் நிகழ்ந்த நிகழ்ச்சி யிருக்கட்டும். என்ன நிகழ்ந்திருக்குமென்பதை அவரவர்களே யறியலாம். அந்ததஸ்கரஸ்வாமி வெகு ஸாமர்த்தியமாக ஸாதித்த பேச்சுக்கள் ப்ரக்ருதத்தில் நமக்கு நினைவுக்கு வந்தமையால் எழுதாமல் உபேக்ஷிக்க முடியவில்லை. இளமையில் கேட்ட இத்தகைய பல நூறு கதைகளை ஏடுபடுத்த அவகாசம் கிடைத்ததற்குப் பரமானந்தப்படுகி றேன். இந்த ஸ்தலத்தில் முன்பு நான் எழுதியிருப்பதை ஈண்டு அநுவதிக்கிறேன்;

"த்ரௌபதி கதறின காலத்திலே கண்ணபிரான் நேரில் எழுந்தருளாமைக்குச் சிலர் கூறும் காரணம் மஹாபாரத விருத்தம். அந்த ஸமயத்திலே ருக்மிணிப் பிராட்டியானவள் கண்ணனைப் பஞ்ச சயனத்தின் மேலேற்றிக் கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பனுக்குப் போகமயக்குக்களாலே மயங்கப்பண்ணி

விட்டாளென்றன்றோ பிறர் சொல்லுவது மெழுத்வதும். இது மஹாபாரத
விருத்தம்' மஹாபாரதே வநபர்வணி பன்னிரண்டாமத்யாயத்தில்—வநவாஸம்
செய்கின்ற பாண்டவர்களிடத்துக் கண்ணபிரானெழுந்தருளின வரலாறு கூறப்
பட்டிருக்கிறது. (ச்லோ. 1.) *பாஞ்சாலீ புண்டரீகாக்ஷம் ஆஸீநம் யாதவைஸ் ஸஹ,
அபிகம்யாப்ரவீத் க்ருஷ்ணு சரண்யம் சரணைஷிணீ* என்று தொடங்கிக் கண்ண
பிரானை நோக்கி த்ரௌபதி முறையிட்ட முறையீடுகள் வெகு விரிவாக வருணிக்கப்
பட்டிருக்கின்றன. அப்போது கண்ணபிரான் த்ரௌபதியை ஆச்வாஸப்படுத்தி
விட்டு: (அத்யாயம் 13ல்) தரும புத்திரரை நோக்கி *நைதத் க்ருச்ச்ரமநுப்ராப்தோ
பவாந் ஸ்யாத் வஸுதாதிப, யத்யஹம் த்வாரகாயாம் ஸ்யாம் ராஜந் ஸந்நிஹித:
புரா, ஆகச்சேயமஹம் த்யூதம் அநாஹூதோபி கௌரவை:......வாரயேய
மஹம் த்யூதம் பஹூந் தோஷாந் ப்ரதர்சயந்*. இத்யாதிகள் கூறியுள்ளான்.
அதாவது, நீங்கள் இப்படிப்பட்ட கஷ்டத்தை யடைந்த காலத்தில் நான் த்வார
கையில் இருக்கவில்லை; அங்கு இருந்தேனாகில் இப்படிப்பட்ட கஷ்டம் உங்க
ளுக்கு நேர்ந்தே யிராது. என்னையழையாமலிருந்தாலும் நானாகவே அங்கு வந்து
சூதாட்டமே நடவாதபடி தடுத்திருப்பேன்........என்றான். பிறகு (அத்யாயம் 14ல்)
கண்ணனை நோக்கி தருமபுத்திரர் கேட்கிறார்—*அஸாந்நித்யம் கதம் க்ருஷ்ண!
தவாஸீத் வ்ருஷ்ணிநந்தந, க்வசாஸீத் விப்ரவாஸஸ் தே கிஞ்சா கார்ஷீ:
ப்ரவாஸத:* கண்ணா! நாங்கள் கஷ்டப்பட்ட காலத்தில் நீ த்வாரகையில் இருக்க
வில்லை யென்கிறாயே; அப்போது எங்கே வெளியேறி யிருந்தாய்? என்ன
காரியத்திற்காக வெளியேறியிருந்தாய்? இதைச் சொல்லவேணுமென்றார்.
அதற்குக் கண்ணபிரான்* ஸால்வஸ்ய நகரம் ஸௌபம் கதோஹம் பரதர்ஷப,
நிஹந்தும் கௌரவ ச்ரேஷ்ட! தத்ர மே ச்ருணு காரணம்* என்று தொடங்கி
ஸால்வவதத்திற்காகத் தான் தேசாந்தரம் சென்றிருந்த வரலாற்றைவிரிவாக
வுரைத்திருக்கிறான். இதிஹாஸ தத்துவம் இங்ஙனேயிருக்க, த்ரௌபதி கதறின
போது க்ருஷ்ணபகவான் த்வாரகையிலே யிருந்ததாகவும், எழுந்துவர வொட்
டாதபடி ருக்மிணிப்பிராட்டி லீலா ரஸவிசேஷங்களாலே தடுத்து விட்டதாகவும்
சிலர் சொல்லுவது மெழுதுவதும் பொருந்துமாவென்பதை ப்ராமாணிகர்கள்
பரிசீலிக்கவேணும்."

இங்ஙனே முன்பு நாமெழுதியிருப்பது. இதைக்கண்ட விவர் பிராமாணிகராயிருந்
தால் அஞ்ஜலி பந்தமல்லது வேறொன்றும் செய்யகில்லார். ருக்மிணிப்பிராட்டி
யோடுகூட ரஹஸ்யகேளிகளை நடத்திக்கொண்டிருந்தாரென்கிற ஆகாச தாண்டவ
கதைக்கு அணுவளவேனும் அவகாசமுண்டோ? இங்கு விவாதவிஷயம் இன்ன
தென்று கவனித்து எழுத வேணுமென்கிறார்; சிங்கப்பெருமாள் ஸாதிக்கக் கேட்ட
வொரு கதையும் இங்கு நினைவுக்கு வருகிறது. ஒரு ஸ்வாமி பட்டுப் பீதாம்பரக்
கடையில் புகுந்து ஆயிரம் ரூபாவிலையுள்ள பட்டுகள் சால்வைகள் சேலைகள் வாங்கிக்
கட்டியெடுத்துக் கொண்டு காசு கொடாமலே வண்டியேறினாராம். கடைக்காரன்
ஓடிவந்து காசு கொடாமலே போகிறீர்களே, இது என்ன? என்கிறான். எதற்
காகக் காசு என்கிறாரிவர். ஆயிரம் ரூபாய்க்குப் பட்டுப் பீதாம்பரங்களெடுத்தீர்
களே யென்கிறானவன். என்ன எடுத்தோமென்கிறாரிவர். 300 ரூபாய்க்கு சால்வை
கள்; 250 ரூபாய்க்கு பட்டுகள்; 450 ரூபாய்க்கு சேலைகள்-எடுத்தீர்களே யென்கிறா
னவன். 'எடுத்தோமையா எடுத்தோம்; அதற்கென்ன?' என்கிறார் இவர். காசு
கொடுங்கள் என்கிறானவன். காசு எதற்காக? என்கிறாரிவர். மறுபடியும் பழைய
படியே அவன் பாடம் படிக்கிறான். இவரும் 'எடுத்தோமையா எடுத்தோம்; அதற்
கென்ன?' என்கிறார் - தைத்திரீய உபநிஷத்தில் ஆனந்த வல்லிபோல் உபயர்
களுடைய வாக்பர்யாயங்கள் திரும்பித் திரும்பிச் செல்லுகின்றன. நூற்றுக்கணக்
கான பேர்கள் திரண்டு விநோதம் பார்க்கிறார்கள். இவரோ, "சிலரும் சிலர்க்குச்
சிலரும் எழுதுகிறார்கள்" என்கிறார். இந்த அர்த்தமற்ற பேச்சுத்தவிரவேறுண்டோ?

39. த்ரௌபதி கூக்குரலிட்டபோது கண்ணபிரான் த்வாரகையில் இருந்ததாகவும், ருக்மிணிப் பிராட்டியோடு ரமித்துக் கொண்டிருந்ததாகவும், அந்த ருக்மிணி கண்ணனை யெழுந்திருக்க வொட்டாமல் தடைசெய்து விட்டதாகவும், அதற்கொரு முக்கிய காரண முண்டென்பதாகவும்—இவ்வளவு கல்பனைகளைச் செய்து எழுதி வைத்தவர், இவையெல்லாம் அஸம்பாவிதமென்று நாம் ஸப்ரமாணமாகக் காட்டின பின்பு செய்ய வேண்டிய காரியமென்ன? இதை யன்றோ இங்கு முக்கியமாக ஒவ்வொருவரும் பார்க்கவேணும்.

"ஆசார்ய கோஷ்டியில் சேராதவரும் நம்மைப் போலவே ப்ரமப்ரமாத விப்ரலிப்ஸாதிகளுக்கு ஆஸ்பத பூதருமான நவீந ஜீயரொருவர் எழுதிவைத்ததை நம்பிக் கெட்டேன்; எடுத்துக் காட்டிய மஹாபாரத ச்லோகங்களிலிருந்து தெளிவு பெற்றேன். இதை யொன்றும் காணாத அந்த ஜீயரெழுதிய புத்தகத்தைச் சிலர்க்குக் காட்டத் தலையால் சுமந்து சென்றதற்கு லஜ்ஜித்தேன், அநுதபித்தேன். அந்த ஜீயருடைய புத்தகத்தை இனிமேல் நான் பிரமாணமாகக் கொள்வதில்லை; அஸ்தாநே அதை ப்ராமாணமாகக் கொண்டதிலிருந்து தான் இவ்விவாதம் இவ்வளவு வளர்ந்திட்டது; இப்போது நல்ல தெளிவு பெற்றேன்; இனி வாழ்ந்து போவேன். இந்த விவாதம் இவ்வளவோடு சாந்தமாகுக." என்றெழுதி வெளியிட்டு ச்வேத த்வீபவாஸிகளின்படியே வாழவேண்டுமிவர். அதை விட்டுத் திலகாஷ்ட மஹிஷபந்தன மென்னும்படி இருநூற்றெட்டு பக்கங்களை வீணாக வளர்த்தி "ஒப்புக்கொண்டோம்; ஒப்புக் கொள்ளுவோம்; இல்லை செய்வோமல்லோம்; இல்லை செய்ய நாம் முன் வரவில்லை; அது நமக்கும் ஸம்மதமே" என்று எழுதி ஏடுகளை நிரப்பினால் இதில் எந்த பாமரர் மயங்குவரென்று இவர் நினைக்கின்றாரோ அறியோம்.

40. "த்ரௌபதியின் மஹத்தான ஆபத்திலே கண்ணபிரான் நேராக எழுந்தருளவில்லையென்பது தான் இங்கு முக்கியமான விஷயம்" என்கிறார், காரியம் முக்கியமானால் அதன் காரணமும் முக்கியமன்றோ. இவர் தெரிவித்த காரணங்கள் அஸம்பத்தமென்றும் அக்ருதமென்றும் முடிந்துவிட்டால் மற்ற ஆகாச தாண்டவங்கள் எங்கே விலை செல்லும்? த்ரௌபதீ பரிபவ காலத்தில் உண்மையில் கண்ணபிரான் த்வாரகையிலிருந்தாலுங்கூட த்ரௌபதீஸகாசத்திலே எழுந்தருள வேண்டிய ஆவச்யகதை சிறிதுமில்லை. எழுந்தருள்வதற்கு அது ஸமயமுமன்று. *சதச்லோகேந பண்டித:* என்று கேட்டு நூறு ச்லோகங்களைச் சிந்தனை செய்து பாண்டித்யம் பெற்றுவிட்டோமென்று களித்த மேதாவி யொருவன் ச்வசுரக்ருஹம் சென்று * த்ருஷ்டமாத்ரே நமஸ்குர்யாத் ச்வச்ரூம் ச்வசுரமேவச * என்கிற ச்லோகத்தை நினைத்து த்ரௌபதீதர்மிணியா யிருந்த மாமியாரை யணுகி அம்மாமீ தாஸன்! என்றும், ப்ரக்ஷாளன ப்ரவணராயிருந்த மாமனாரை யணுகி மாமா! தாஸன் என்றும் சொல்லி ஸாஷ்டாங்க ப்ரணிபாதம் செய்து அபிவாதநமும் செய்தானாம். கண்ணபிரானை அவனுக்கு ஸஹோதரனாக்கப் பார்க்கிறாரிவர். இத்தகைய ஜுகுப்ஸநீய வாதங்களில் நூல் விரிவு போதுமென்று நிற்கிறோம். *